


# கனகத்தூதன்

Canadian Tamil Catholic Messenger

**CanaCaThuthan**

No: 38 August 20, 2016 இதழ்: 38

Publication Mail Agreement No :41416031
Return Undeliverable Canadian Addresses to:

The Canadian Tamil
-Catholic Messenger
19 Callowhill Ave.
Richmont Hill, On. L4B 4H5


மேரிலேக் திருப்பயணச் சிறப்பிதழ்

**Special Issue on Marylake Pilgrimage**






## சென்னை - மயிலாப்பூர் உயர் மறைமாவட்ட பேராயர் ஜோர்ச் அந்தனிசாமி ஆண்டகை அவர்களே வருக!






## மிட்லண்ட் திருத்தலத்தின் இரு ஆயர்கள் இருபது குருக்கள் 15,000 மக்கள் ஒன்று கூடினர்





## இங்கிலாந்தில் தூய பத்திரிசியார் பழைய மாணவர் ஒன்று கூடல் 300,000 டொலர்கள் நிதி சேகரிப்பு

## மருதமடு அன்னையின் திருத்தலத்தில் ஆகஸ்ட் பெருவிழா





## ஜேர்மனி - கேவலார் திருத்தலத்தின் புலம்பெயர் தமிழ் மக்களின் திருப்பயணம்






# சென்னை - மயிலாப்பூர் உயர் மறைமாவட்ட பேராயர் ஜோர்ச் அந்தனிசாமி ஆண்டகை அவர்களை ரொறன்ரோ தமிழ் சமூகம் வரவேற்கின்றது



பேராயர் ஜோர்ச் அந்தனிசாமி ஆண்டகை அவர்கள் சென்னை-மயிலாப்பூர் உயர் மறைமாவட்டத்தின் 6வது பேராயராவார். இவர் 16ஆம் பெனடிக்ற் திருத்தந்தையால் 2012ஆம் ஆண்டு நொவம்பர் 21ஆம் நாள் சென்னை-மயிலாப்பூர் உயர் மறைமாவட்டத்தின் பேராயாராக நியமனம் செய்யப்பட்டார்.

பேராயர் அவர்கள் 1952ஆம் ஆண்டு பெப்ரவரி மாதம் தமிழ் நாட்டின் நகர்களில் ஒன்றான திருச்சியில் பிறந்தார். ரோமையிலுள்ள ஊர்பானிய பல்கலைக்கழகத்தில் குருத்துவத்திற்கான மெய்யியல் இறையியல் கல்வியை கற்று அவற்றில் கலாநிதி, முதுமானிப்பட்டங்களையும் பெற்று 1980 ஆம் ஆண்டு நொவம்பர் மாதம் 19ஆம நாள் திருச்சி ஆயராக விளங்கிய மேதகு தோமஸ் பெர்னான்டோ ஆண்டகையால் திருச்சி மறைமாவட்டத்திற்காக குருவாக திருநிலைப்படுத்தப்பட்டார்.

தூய மீட்பர் பேராலயத்தில் உதவிப்பங்குக் குரவராக ஒரு வருடம் பணியாற்றிய பின்னர் ரோமைக்கு மேல்படிப்புக்காக திருச்சி ஆயரால் அனுப்பிவைக்கப்பட்டார்.

2002 ஆம் ஆண்டு தூய 2ஆம் ஜோண் பவுலினால் யோர்தானிலுள்ள வத்திக்கான் தூதுவராலயத்தில் பொறுப்புள்ள அதிகாரியாக பணிபுரிய நியமனம் பெற்றார்.

2005ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 4ஆம் நாள் திருத்தந்தை 16ஆம் பெனடிக்ற் இவரை ஆயராக நியமித்தார். ஆயராக திருநிலைப்படுத்தல் நிகழ்வு 2005ஆம் ஆண்டு செப்ரம்பர் மாதம் 21ஆம் நாள் மும்பை பேராயர் ஐவன் கர்தினால் டயஸ் ஆண்டகையின் தலைமையில் பேராயர் கென்றிக் கொசர் திருச்சி ஆயர் அன்ரனி டிவோட்டா அவர்களுடன் நிகழ்ந்தது.

சென்னை-மயிலாப்பூர் உயர் மறைமாவட்டத்தின் ஆயராக நியமனம் பெறும்வரையில் கம்பியா, லிபேரியா, சையிரோ லியோன் ஆகிய நாடுகளுக்கு திருந்தந்தையின் சிறப்புத் தூதுரவாக 7 ஆண்டுகள் பணியாற்றியுள்ளார்.

ரோரன்ரோ பெரும்பாகத்தில் வாழும் தமிழ் கத்தோலிக்க மக்களனைவரும் சென்னை-மயிலாப்பூர் உயர் மறைமாவட்டத்தின் பேராயர் ஜோர்ச் அந்தனிசாமி ஆண்டகை அவர்களை பெரு மகிழ்வுடன் வருக வருக என வரவேற்கின்றோம்.

# இரக்கத்திற்கு ஓர் அழைப்பு அன்னை தெரேசாவின் புதிய நூல்

அனைவராலும் புறக்கணிக்கப்பட்டு, வீடின்றி, தெருவில் வாழ்வோரைக் காணும்போது, தன்னுடைய ஆன்மீகப் பயணத்தில், அதுபோல் உணர்ந்த நேரங்கள் நினைவுக்கு வருகின்றன என்று அருளாளர் அன்னை தெரேசா கூறியுள்ளார். அன்னை தெரேசா அவர்கள் கூறியதாகச் சொல்லப்படும் கருத்துக்கள், குறிப்பாக, இதுவரை அச்சு வடிவில் வெளியிடப்படாதக் கருத்துக்கள், ஒரு நூல் வடிவில் தொகுக்கப்பட்டு, ஆகஸ்ட் 16ம் தேதி, இச்செவ்வாயன்று வெளியிடப்பட்டது.

'இரக்கத்திற்கு ஓர் அழைப்பு: அன்பு செய்வதற்கு உள்ளமும், பணியாற்ற கரங்களும்' என்ற தலைப்பில், Image Books என்ற நிறுவனத்தால் வெளியிடப்பட்டுள்ள இந்நூலுக்கு, அன்னை தெரேசாவின் புனிதர்பட்ட பணிகளில் ஈடுபட்டிருந்த அருள் பணியாளர், Brian Kolodiejchuk அவர்கள் முன்னுரை வழங்கியுள்ளார்.
வீடின்றி தெருவில் வாழ்வோர் என்ற நிலை, வறுமைப்பட்ட நாடுகளில் மட்டுமல்ல, செல்வம் மிகுந்த நாடுகளிலும் உள்ளது என்பதை இந்நூலில் கூறியுள்ள அன்னை தெரேசா அவர்கள், இப்பிரச்சனை யைத் தீர்க்க தன்னுடைய துறவு சபை மேற்கொண்ட பல முயற்சிகள் குறித்தும் இந்நூலில் பதிவு செய்து உள்ளார் என்று Zenit கத்தோலிக்கச் செய்தி கூறுகிறது.

கடவுளின் இரக்கத்தை, சிலுவையின் வழியாக நாம் தொடமுடியும் அதே இரக்கத்தால் நாம் தொடப்படுகிறோம்"

# பத்திரிசியார் கல்லூரி பழைய மாணவர்கள் 150,000 பிரித்தானிய பவுண்கள் நிதி சேகரிப்பு ($300, 000)

உலகலாவிய ரீதியில் ஒழுங்கு செய்யப்பட்ட தூய பத்திரிசியார் கல்லூரி பழைய மாணவர்களின் ஒரு வார ஒன்று கூடல். 150,000 பிரித்தானிய பவுண்கள் நிதி சேகரிப்பு

யாழ்ப்பாணம் தூய பத்திரிசியார் கல்லூரி 1850ஆம் ஆண்டுகளில் ஆரம்பிக்கப்பட்டு கல்விச் செல்வத்தை தமிழ் மக்களுக்கு மட்டுமல்லாமல் ஈழம் பூராகவும் சிறப்பாக வழங்கிவந்த கல்லூரியாகும். ஆரம்பத்தில் அமலமரித்தியாகிகளால் நிர்வகிக்கப்பட்டு யாழ் ஆயர்களின் தொடர்ச்சியான பராமரிப்பில் இயங்கிவரும் தூய பத்திரிசியார் கல்லூரி இன்றும் இலங்கையில் ஒரு பிரபல்யமான முக்கியமான இடத்தைப் பெறுகின்றது. இலங்கை அரசின் மட்டுப்படுத்தப்பட்ட உதவியோடு ஒரு கத்தோலிக்க கல்லூரியாக எண்ணற்ற சவால்களோடு கல்விப்பணியை ஆற்றிவருகின்ற ஒரு கல்லூரியாகும்.

ஆயிரத்துக்கு மேற்பட்ட மாணவர்கள் கல்வியை பெற்றுக்கொள்ளும் இக்கல்லூரியின் தேவைகள் ஏராளம். இவற்றில் அனேகமானவற்றை கல்லூரியின் பழைய மாணவர்கள் ஓரளவு பூர்த்தி செய்து வருகின்றார்கள் என்று குறிப்பிடலாம். இக்கல்லூரியின் பழைய மாணவர்கள் யாழ்ப்பாணம், கொழும்பு மட்டிலுமல்லாமல் புலம்பெயர்ந்த தேசங்களில் குறைந்தளவு 14 நாடுகளில் பழைய மாணவர்கள் சங்கங்கள் அமைத்து செயல்பட்டு வருகின்றார்கள். குறிப்பாக இங்கிலாந்து, கனடா, அவுஸ்திரேலியா நாடுகளில் சிறப்பாக இயங்கிவருகின்றனர். சிறப்பாக லண்டனில் இயங்கிவரும் பழைய மாணவர் அமைப்பு இக்கல்லூரிக்கு உதவிகளை வழங்குவதில் மிகவும் முன்னணியில் உள்ளதொன்றாகும்.

கடந்த காலங்களில் 5 தடவைகள் உலகலாவிய ரீதியில் தூய பத்திரிசியார் கல்லூரி பழைய மாணவர்களின் ஒன்று கூடல்கள் லண்டனிலும் கனடாவிலும், இலங்கையிலும், நோர்வையிலும் மீண்டும் ஒரு தடைவ (இவ்வருடம்) லண்டனிலுமாக இடம்பெற்றுள்ளது.

கடந்த மாதம் ஜுலை 22ஆம் திகதி தொடக்கம் 31ஆம் திகதி வரை இவ்வொன்று கூடல் இங்கிலாந்தில் இடம்பெற்றது. தொடக்க நிகழ்வாக ஜுலை 22-24ஆம் திகதிகளில் இங்கிலாந்தின் கீழே தொங்கிக்கொண்டிருக்கும் தீவான (Isle of Weights). இல் 180க்கு மேற்பட்ட பழைய மாணவர்கள் (சிலர் தங்கள் குடும்பங்களுடன்) முன்னாள் அதிபர் அருட்பணி பேணாட், தற்போதைய அதிபர் அருட்பணி ஜெறோ செல்வநாயகம் அவர்களுடன் இங்கிலாந்து பழைய மாணவர் அமைப்பின் தலைவர் ஜெயராஜா அருளானந்தம் அவர்களின் பாரிய விடுதிகளான மொறிஸ் மற்றும் மரியா கொட்டல்களில் ஒன்று கூடி பல ஆக்கபூர்வமான செயல்பாடுகளிலும் திருப்பலி, தீவினை சுற்றிப்பார்ப்பதிலும் பொழுதைக்களித்தனர்.

தற்போதைய இலங்கை கல்விப் பாடத்திட்டத்தில் புதிய அலகொன்றை (தொழில் நுட்பவியல் தொடர்பான) அறிமுகம் செய்யவேண்டிய அவசியம் பற்றி பழைய மாணவர்களுக்கு அதிபரும் இம்முயற்சிக்கு துணைகொடுக்கும் முகமாக புதிய யாழ் ஆயரின் வேண்டுகோளுக்கமைய கலிபோர்னியாவில் வசித்துவரும் பொறியியளாரும் தொழில்நுட்பம்சார்ந்தவற்றில் வல்லுனருமான லோகன் சவிரிமுத்து அவர்களும் இத்திட்டம்பற்றி விளக்கம் அளித்தனர். இத்திட்டத்திற்கு 179,000 பிரித்தானிய பவுண்கள் (350,ஆயிரம் கனடிய டொலர்கள்) தேவைப்படுவதாக விளக்கினர். இதற்கான நிதிசேகரிப்பை மருத்தவ பேராசிரியர் சித்திரமோகனிடம் அமைப்பின் தலைவர் ஜெயராஜா அருளானந்தம் அவர்கள் வழங்கினார். கலாநிதி சித்திரமோகனும் தனது கற்பனைத் திறனைக் கையாண்டு சில ஆயத்தங்களையும் மேற்கொண்டு நிதி சேகரிப்பை மேற்கொண்டனர்.

எதிர்பாராத வகையில் கொடையாக கொடுக்கின்ற ஒரு சூழ்நிலை ஏற்படுத்தப்பட்டு பல மருத்துவ கலாநிதிகளும், பொறியியலாளர்களும் மற்றும் தொழில்சார் வல்லுனர்களும் பெரிய மனம் படைத்தவர்களாக 30 மணித்துளிகளில் 130,000 க்கு அதிகமான பிரித்தானிய பவுண்கள்(260 ஆயிரம் கனடிய டொலர்கள்) கொடுப்பதாக உறுதிமொழி வழங்கப்பட்டது. மிகவும் பராட்டப்படவேண்டிய முயற்சி. இவ்வலகு தூய பத்திரிசியார் கல்லூரியில் அறிமுகப்படுத்தப்பட்ட பின் நமது சகோதரர்கள் (தாயகத்தில் வாழும் பிள்ளைகள்) அதிக பயன் பெறுவர் என உறுதி.
இந்நிகழ்வினைத் தொடர்ந்து 26ஆம் நாள் புதன்கிழமை லண்டன் தேம்ஸ் நதியில் உல்லாசப் படகு பயணமும் 30ஆம் நாள் சனிக்கிழமை 600 பேருக்கு மேல் கலந்து கொண்ட இராவுணவில் புதிய ஆயர் யஸ்ரின் ஞானப்பிரகாசம் ஆண்டகை பிரதம அதிதியாக கலந்து கொண்டார். இப்பாரிய முன்னெடுப்பை விழாக்குத்தலைவர் லூாயிஸ் வேதநாயகம் கலாநிதி ரூபக்குமார் மற்றும் பழைய மாணவர் அமைப்பினர் கடுமையான உழைப்பின் பயனாக வெற்றியடைய வைத்தனர் எனப்பலரும்




ஆசிரியர்:
அன்ரன் சின்னராசா பிலிப்
Editor:
Anton Sinnarasa Philip
anton.philip@gmail.com
416.300.7026

நிர்வாகம்:
அஞ்சலோ சுவாம்பிள்ளை
Administration:
Angelo Swampillai



# ஆசிரியரின் உள்ளத்திலிருந்து...

அன்பில் குறையா அன்புள்ளங்களே,

அன்னையின் விண்ணேற்பு விழாவில், மருதமடு அன்னையின் பெருநாளில் இவ்விதழ் மூலமாக சந்திப்பதில் மகிழ்ச்சியடைகின்றேன். ஒரு மாதத்தின் முன்னர் மிட்லன்ட் மறைசாட்சியர்களின் திருத்தலத்தில் ஆயிரம் ஆயிரமாக நாமனைவரும் திரண்டு வந்து நமது சகோதரத்துவத்தையும் உறவையும் கொண்டாடி இறைவனுக்கு திருப்பலியை ஒப்புக்கொடுத்து மறைசாட்சியர்களை மகிமைப்படுத்தி இல்லம் சென்றோம். மீண்டும் மேரிலேக் திருப்பதியில் ஆயிரக்கணக்கில் கூடி அன்னை விண்ணகம் எடுத்துக்கொள்ளப்பட்டதைக் கொண்டாடியும் எமது தாயகத்தில் நாமெல்லோரும் ஒன்றாகக் கூடி மருதமடு திருப்பதியில் மடு அன்னைக்கு விழா எடுத்தின் நினைவுகளை மீட்கும் வகையில் விழா எடுக்கவும் ஒன்று கூடுகின்றோம்.

இன்றைய பெருவிழாவில் சென்னை மயிலாப்பூர் பேராயர் அந்தனிசாமி ஆண்டகை அவர்களும் கலந்து கொண்டு விழாவை சிறப்பிப்பது மிகவும் மகிழ்ச்சி தரும் நிகழ்வாகும். மரியாவின் விண்ணேற்பு, நாம் அனைவரும் அக்கறை கொள்ளும் நம் வருங்காலம் பற்றிய ஒரு மாபெரும் பேருண்மையாகும், இது, புதிய விண்ணகத்தையும், புதிய பூமியையும் நமக்கு உறுதியளிக்கின்றது என்று கூறுகிறார் நமது திருத்தந்தை பிரான்சிஸ்.

அன்னை மரியாவின் விண்ணேற்பு விழாவில் வத்திக்கான் தூய பேதுரு வளாகத்தில் கூடியிருந்த விசுவாசிகளுக்கு மூவேளை செப உரை வழங்கிய திருத்தந்தை பிரான்சிஸ் அவர்கள், மரியாவின் புகழ் பாடல், மனித சமுதாயம் அனைத்தின் பாடலாக மாறியுள்ளது என்றும் கூறினார். இன்றைய விழாவின் நற்செய்தி, மரியாவுக்கும், அவரது உறவினரான எலிசபெத்திற்கும் இடையே நடந்த சந்திப்பு பற்றிச் சொல்கிறது என்றும், மரியா, இறைத்தந்தை மற்றும் தமது மகன் இயேசுவின் திருமுகங்களைச் சந்திக்கச் சென்ற விண்ணக எருசலேம் நோக்கிய பயணம் பற்றி, இன்று தியானிக்கிறோம் என்றும், அன்னை மரியா தமது வாழ்வில் பலமுறை மலைப்பகுதியில் பயணம் செய்துள்ளார், அப்பயணத்தின் இறுதியாக, அவர் கல்வாரியில் நின்றார் என்றும் கூறினார் திருத்தந்தை.

வாழ்வின் சுமையாலும், வன்முறையின் கொடுமையாலும் துன்புறும் பெண்களையும், வல்லமைமிக்கவரின் ஆணவத்திற்கு அடிமையான பெண்களையும், மனிதமற்ற வேலைக்குக் கட்டாயப்படுத்தப்பட்ட சிறுமிகளையும், ஆண்களின் பேராசைக்குத் தங்களின் உடலையும், உணர்வுகளையும் அர்ப்பணிக்கக் கட்டாயப்படுத்தப்பட்ட பெண்களையும் இந்நாளில், சிறப்பாக நினைவுகூர்வோம், அவர்களுக்கு, அமைதி, நீதி, அன்பு ஆகிய வாழ்வின் தொடக்கம் விரைவில் கிடைக்கட்டும் என்றும் கூறுகிறார் திருத்தந்தை பிரான்சிஸ்.

அமைதியின் நாள்களை நமக்கு அளிக்கவும், நம் வாழ்வுப் பாதையைக் கண்காணிக்கவும், விண்ணக மகிமையின் முழுமையில், அவரது திருமகனை நாம் காணவும், விண்ணகத்தின் சுவையான அரசியிடம் நம்பிக்கையுடன் செபிப்போம் என்று நிறைவு செய்தார் திருத்தந்தை பிரான்சிஸ்.

வாழ்வுப் பயணத்தில் எப்போதும் நம்முடன் வரும் அன்னை மரியா - இறைவனின் மகிமையில் வாழும் அதேவேளை, நம் வாழ்வுப் பயணத்தில் எப்போதும் நம்முடன் கூட வரும் அன்னை மரியாவின் தாய்க்குரிய பாதுகாப்பில் உங்களனைவரையும் ஒப்படைக்கிறேன்' என தன் டுவிட்டர் பக்கத்தில் செய்தி வெளியிட்டார், திருத்தந்தை பிரான்சிஸ். அன்னை மரியா விண்ணேற்படைந்த விழாவையொட்டி, ஆகஸ்ட் 15, இத்திங்களன்று 9 மொழிகளில் டுவிட்டர் செய்தி வெளியிட்டுள்ள திருத்தந்தை பிரான்சிஸ் அவர்கள், நம் வாழ்வுப் பயணத்தில் அன்னை மரியா நம்முடன் எப்போதும் துணை வந்து நம்மைக் காக்கிறார் என உரைத்துள்ளார்.

இச்சந்தர்ப்பத்தை பயன்படுத்தி நமது அன்னை பற்றி 2ஆம் வத்திக்கான் சங்கம் திருச்சபை எனும் தொகுப்பில் மிக அழகாக பல சிந்தனைகளை நமக்கு வழங்கியுள்ளது. அவற்றில் ஒரு சிலவற்றை உங்களுடன் பகிர்ந்து கொள்கின்றேன்.

**இயேசுவின் பொது வாழ்விலே மரியா -** இயேசுவின் பொது வாழ்வில் அவருடைய தாய் குறிப்பிடத்தக்க முறையில் தோன்றுகிறார். கலிலேயா நாட்டின் கானாவில் திருமண விருந்தில் மெசியாவாகிய இயேசுவிடம் இரக்கத்தோடு பரிந்துரைத்து, அவர் தம் முதல் அருள் அடையாளத்தைச் செய்யுமாறு (காண் யோவா 2:1-11) தூண்டும் வேளையில் முதன் முறையாக மரியா தோன்றுகிறார். உடல் இரத்த உறவுகளைய் அவற்றின் பிணைப்புகளையும் கடந்ததே தமது ஆட்சி என்று கூறி, தம் அன்னை நம்பிக்கையோடு செய்து வந்தது போல் (காண் லூக் 2:19ம் 51ம்) இறைவார்த்தையைக் கேட்டு அதைக் கடைப்பிடிப்போர் பேறுபெற்றவர் எனக் கிறிஸ்து பறைசாற்றியபோது (காண் மாற் 3:35 ஒத் லூக் 11:27-28), இவ்வார்த்தைகளை அவர் ஏற்றுக் கொண்டார். இவ்வாறு தூய கன்னியும் நம்பிக்கைத் திருப்பயணத்தில் முன்னேறிச் சென்றார் தம் மகனோடு கொண்ட ஒன்றிப்பை சிலுவைவரை விடாது காத்துன வந்தார் கடவுளின் திட்டத்திற்கேற்பச் சிலுவையின் அருகே நின்றார் (காண் யோவா 19:25) தம் ஒரே மகனோடு கடுமையாகத் துன்புற்றார் தாயுள்ளத்தோடு தன்னையே அவரது பலியுடன் இணைத்தார் தான் பெற்றெடுத்த மகனைப் பலியிடவும் அன்புடன் இசைந்தார். இறுதியாக, 'அம்மா, இவரே! உம் மகன்' (காண் யோவா 19:26-27)182 என்னும் சொற்களால் சிலுவையிலே உயிர்விட்ட அதே கிறிஸ்து இயேசுவே மரியாவைத் தம் சீடருக்குத் தாயாக அளித்தார்.

**விண்ணேற்புக்குப்பின் தூய கன்னி** - கிறிஸ்துவால் வாக்களிக்கப்பெற்ற ஆவியார் வரும்வரை மனிதகுல நிறைவாழ்வின் மறைபொருளை ஆடம்பரமாக வெளிப்படுத்தக் கடவுள் விரும்பவில்லை. எனவே, பெந்தகோஸ்து நாள் வரை திருத்தூதர்கள் "சில பெண்களோடும் இயேசுவின் சகோதரர்களோடும், அவருடைய தாய் மரியாவோடும் இணைந்து ஒரே மனத்தோடு இறைவனிடம் வேண்டிக்கொண்டிருந்தார்கள்" (திப 1:14) என்று படிக்கிறோம். ஏற்கெனவே - வானவர் தூதுரைத்த நேரத்திலேயே தன்மேல் நிழலிட்ட ஆவியாரின் கொடைக்காக மரியா வேண்டிக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். இறுதியாகஈ மாசற்ற கன்னி ஆதிப் பாவக்கறை எதுவுமின்றிப் பாதுகாக்கப்பெற்று,183 தம் மண்ணுலக வாழ்வு நிறைவுற்றதும் ஆன்மாவோடும் உடலோடும் விண்ணுலக மாட்சிக்கு எடுத்துச் செல்லப்பெற்றார்184 அனைத்துலக அரசியாக கடவுளால் உயர்த்தப்பெற்றார் ஆண்டவர்க்கெல்லாம் ஆண்டவரானவரும் (காண் திவெ 19:16) பாவத்தின்மீதும் சாவின்மீதும் வெற்றி கண்டவருமான தம் மகனுக்கு இன்னும் அதிக நிறைவாக ஒத்தவராகுமாறு இவ்வாறு உயர்த்தப்பெற்றார்.185

**தூய கன்னியும் திருச்சபையும் - மரியாவும் ஒரே இணைப்பாளாராகிய கிறிஸ்துவும்** - "கடவுள் ஒருவரே. கடவுளுக்கும் மனிதருக்கும் இடையே இணைப்பாளரும்ஒருவரே. அவரே இயேசு கிறிஸ்து என்னும் மனிதர். அனைவரின் மீட்புக்காக அவர் தம்மையே ஈடாகத் தந்தார்" (1 திமோ 2:506) என்ற திருத்தூதரின் கூற்றிற்கேற்ப, நம் இணைப்பாளர் ஒருவரே. இந்த இணையற்ற இணைப்பாளர் பணி சற்றேனும் மறைவருமில்லை, குறைவதுமில்லை மாறாக, அதன் ஆற்றல் இதன் வழியாக வெளிப்படுகிறது. ஏனெனில், மக்கள் தூய கன்னி கொண்டுள்ள நிறைவாழ்வளிக்கும் செல்வாக்கு அனைத்தும்கட்டாயத் தேவையாலன்று, கடவுளின் விருப்பத்திலிருந்தே உருவாகிறது கிறிஸ்துவினுடைய பேறுபலன்களின் நிறைவுப் பெருக்கத்தினின்றே வழிகின்றது அவரது இணைப்பாளர் பணியையே அடித்தளமாகக் கொண்டுள்ளது அப்பணியை முற்றிலும் சார்ந்ததாய் இருக்கின்றது அதிலிருந்தே தன் ஆற்றல் அனைத்தையும் பெறுகின்றது நம்பிக்கை கொண்டோர் கிறிஸ்துவுடன் கொண்டுள்ள நேர்முக ஒன்றிப்பை இச்செல்வாக்கு எவ்வகையிலும் தடுப்பதில்லை மாறாக அதைப் போற்றி வளர்க்கின்றது. இன்னும் பல அரிய போதனைகளை மரியா பற்றி வத்திக்கான் திருச்சபை எனும் தொகுப்பில் நாம் வாசிக்கலாம். சிந்திக்கலாம்.

உங்களிடமிருந்து விடைபெறும் கனகத்தூதன் ஆசிரியர் அன்ரன் சின்னராசா

## தூய ஆரோக்கிய அன்னை பங்கு

(ரோரன்ரோ உயர்மறைமாவட்டத்தில் தமிழ் மக்களுக்கென ஏற்படுத்தப்பட்ட பங்கு)
இடம்பெறும் நிகழ்வுகள்

ஞாயிறுதோறும் மாலையில் ஸ்காப்ரோவில் 4.30 மணிக்கும் மிசிசாகாவில் மாலை 7.00 மணிக்கும் திருப்பலி இடம்பெறுகின்றது.

**Immaculate Heart of Mary Church**
131 Birchmount Road,Scarborough ON M1N 3J7 Sunday Mass 4.30 p.m

**Our Lady of the Airways Church**
7411 Darcel Avenue Mississauga ON.L4T 2X5 Sunday Mass 7.00 p.m

மாதத்தின் முதல் செவ்வாய் கிழமைகளில் தூய அந்தோனியாருக்கு வணக்க வழிபாடும் திருப்பலியும் மாதத்தின் முதல் வெள்ளிக் கிழமைகளில் இயேசுவின் தூய இதயத்துக்கான வழிபாடும் திருப்பலியும் மாலை 7.30 மணியளவில் மரியாவின் மாசற்ற ஆலயத்தில் இடம்பெறுகின்றன.

## பங்கில் பெறும் அருட்சாதனங்களும் ஆயத்த ஒழுங்குகளும்

திருமுழுக்கு 10 நாட்களுக்கு முன்

முதன் நன்மை உறுதிபூசுதல் 4 மாதங்களுக்கு முன்

திருமணம் 6 மாதங்களுக்கு முன்

விசேட திருப்பலிகள் Anniversary, Memorial, ஒரு கிழமைக்கு முன்

நற்சாட்சி அல்லது வேறு கடிதங்கள் 10 நாட்கள்

வெளிநாடுகளில் திருமுழுக்கு அல்லது திருமணம் - 6 மாதங்களுக்கு முன்

திருமணம் செய்ய முன் ஆயத்தமாக நீங்கள் திருமுழுக்குப்பெற்ற ஆலயத்துடன் தொடர்புகொண்டு he/she is free to marry என்னும் அத்தாட்சிப்படுத்தப்பட்ட பத்திரத்தைப்பெற்றுக்கொள்ளல் வேண்டும்.

# நல்லாட்சியில் சகோதரத்துவ சகவாழ்வு மலரும் என்ற நம்பிக்கை மறைந்து போகிறது



மடு அன்னையின் பெரு விழாவில் ஆயர் கிங்ஸ்லி சுவாம்பிள்ளை ஆண்டகை

ஏற்படுத்தப்பட்டுள்ள நல்லாட்சி மாற்றத்தைத் தொடர்ந்து நல்லாட்சியும் நல்லிணக்கமும் சமத்துவம் சகோதரத்துவ உரிமை வாழ்வும் நாட்டின் அனைத்து மக்களுக்கும் மலரும் என ஆவலுடன் எதிர்பார்த்திருந்தோம். ஆனால் நாட்டின் நடைமுறை செயற்பாடுகளும் எழுகின்ற பிரச்சினைகளும் முரணான அறிக்கைகளும் நமக்கு நம்பிக்கை தருவதாக தெரியவில்லை என மன்னார் மறைமாவட்ட அப்போஸ்தலிக்க பரிபாலகர் ஆயர் கிங்ஸ்லி சுவாம்பிள்ளை ஆண்டகை தெரிவித்தார்.

மன்னார், மருதமடு மாதா ஆலயப் பெருவிழாவில் மறையுரையாற்றுகையிலேயே ஆயர் கிங்ஸ்லி சுவாம்பிள்ளை ஆண்டகை இவ்வாறு தெரிவித்தார்.

அவர் மேலும் கூறுகையில்,

இறையிரக்க ஜுபிலி ஆண்டில் மருதமடு அன்னையின் அன்புப் பிள்ளைகளாகவும் பக்தர்களாகவும் பெரும்திரளாக இப்புனித ப்பதியில் நீங்கள் கூடியிருக்கின்றீர்கள். கடந்த இங்கு ஏற்பட்ட ஆட்சி மாற்றத்தைத் தொடர்ந்து நல்லாட்சியும் நல்லிணக்கமும் சமத்துவம் சகோதரத்துவ உரிமை வாழ்வும் நாட்டின் அனைத்து மக்களுக்கும் மலரும் என ஆவலுடன் எதிர்பார்த்திருந்தோம்.

ஆனால் நாட்டின் நடைமுறை செயற்பாடுகளும் எழுகின்ற பிரச்சினைகளும் முரணான அறிக்கைகளும் நமக்கு நம்பிக்கை தருவதாக தெரியவில்லை. நல்லாட்சியும் நம்பிக்கை தருவதாக அமையவில்லை. நல்லாட்சியும் நல்லிணக்கமும் மந்த நிலைக்கு தள்ளப் பட்டுள்ளதாக தெரிகின்றது. சில நாட்களாக உங்களில் பலர் அன்னையின் திருத்தலத்தில் தங்கியிருந்து செபித்து வருகின்றீர்கள். உங்கள் அனைவரையும் உங்கள் உள்ளத்தில் தாங்கியிருக்கிற எல்லா நற்கருத்துக்களையும் வேண்டுதல்களையும் மடுத்தாயாரின் இடைவிடாத மேலான சகாயத்திலும் பரிந்துரையிலும் ஒப்புக்கொடுத்து உங்களுக்காக செபிக்கின்றோம்.

நாம் அனைவரும் அகில உலக திருச்சபையோடு இணைந்து மரியன்னையின் விண்ணேற்பு பெருவிழாவை கொண்டாகின்றோம். திருச்சபையின் கடன் திருநாட்களில் ஒன்றான இப்பெருவிழா நமது மடுத்திருத்தலத்தின் பிரதான திருவிழாவாகும். திருச்சபை வரலாற்றிலும் பாரம்பரியத்திலும் மரியனனையின் விண்ணேற்பு பெருவிழா தோற்றம்பெற்ற காலசூழ்நிலைகளை நாம் அறிந்துகொள்ள வேண்டும்.



மரியன்னையின் இவ்வுலக வாழ்வினுடைய முடிவு பற்றிய கருத்துக்கள் விவாதங்கள் மத்தியில் 1950 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் முதலாம் திகதி முன்னாள் பாப்பரசர் 12 ஆம் பத்திநாதர் 'மாசற்ற கடவுளின் தாய்' எனும் கோட்பாட்டு வரைவில் மாசற்ற தேவதாயும் எப்பொழுதும் கன்னியுமாகிய மரியாள் தமது இவ்வுலக வாழ்வின் நிறைவில் உடலோடும் ஆன்மாவோடும் விண்ணக மகிமைக்குள் எடுத்துக்கொள்ளப்பட்டாள்' என்று பாப்பரசருக்குரிய வழுவா வரத்தைக்கொண்டு விசுவாச சத்தியமாக பிரகடனப்படுத்தினார். மீண்டும் அவர் 3 ஆண்டுகளுக்குப் பின் அதாவது 1954 ஆம் ஆண்டை மரியன்னை ஆண்டாக அறிவித்து அவ்வாண் டின் நிறைவில் தேவதாயை 'வானதூதர்களினதும் அனைத்து புனிதர்களினதும் அரசியாக' பிரகடனப்படுத்தினார்.

-நாம் அனைவரும் இன, மத, மொழி பேதமின்றி இறைவேண்டுதல் செய்து இத்திருவிழாவில் ஒரே அன்னையின் மக்களாக ஒன்றணைந்து இருப்பதில் பெருமிதம் அடைகின்றோம். இருந்தபோதும் தற்போது எமது நாட்டில் இன்றைய சூழ்நிலைகளை எண்ணிப்பார்ப்பது நலமென நினைக்கின்றேன். நாட்டின் தலைவர்கள் அனைவரும் குறுகிய சுயநல அரசியல் ஆதாயங்களை கடந்து நாட்டின் அனைத்து மக்களின் நலன் ஒன்றையே கண்முன் கொண்டு நீதியான நல்லிணக்கம் கொண்ட நல்லாட்சியை நிறுவ முன்வரவேண்டும் என பணிவுடன் கேட்டுக்கொள்கின்றேன். இதற்காக மடு தாயாரின் பரிந்துரையை சிறப்பாக வேண்டுவோம்.

அத்துடன் ஓய்வுபெற்றுள்ள மன்னார் மறைமாவட்ட முன்னாள் ஆயர் இராயப்பு யோசேப் ஆண்டகை இத்திருத்தலத்தின் வளர்ச்சிக்கும் விருத்திக்கும் ஆற்றிய பணி கள் அளப்பரியன. மடுத் திருத்தலத்துக்கு திரு யாத்திரை செய்யும் யாத்திரிகர் இறையனுபவமும் ஆன்மீக வளமும் பெற்றுக்கொள்ள கடந்த காலங்களில் அவர் பல்வேறு ஆன்மீக பௌதீக அபிவிருத்தியை செய்துள்ளமைக்கு நாம் அவருக்கு நன்றி உள்ளவர்களாக இருக்க வேண்டும் என்றார்.

# மிட்லன்ட் மறைசாட்சியர்களின் திருத்தலத்தில்
# 15,000 க்கும் அதிகமான தமிழ்



மிட்லன்ட் மறைசாட்சியர்களின் திருத்தலத்தில் 15,000 க்கும் அதிகமான தமிழ் மக்கள் ஒன்று கூடி திருவழிபாடுகளில் பங்கேற்றனர்.

கனடாவின் தேசிய திருத்தலங்களில் ஒன்றாக விளங்கும் கனடிய மறைசாட்சியர்களின் திருத்தலம் இவ்வருடம் தனது 90வது ஆண்டு நிறைவைக் கொண்டாடுகின்றது.

கனடா வாழ் கத்தோலிக்க தமிழ் மக்கள் கடந்த 29 ஆண்டுகளாக மிட்லன்ட் மறைசாட்சியர்களின் திருத்தலத்துக்கு திருப்பயணம் மேற்கொண்டு வருகின்றார்கள். தமிழ் மக்களின் ஆண்டுக்கான பொதுத்திருப்பயணம் ஒவ்வோர் வருடமும் ஜுலை மாதம் 3வது சனிக்கிழமைகளில் இடம் பெறுவதற்க்கு மிட்லன்ட் திருத்தல நிர்வாகம் ஒழுங்கு செய்திருக்கின்றது. இவ்வாண்டு ஜுலை 16ம் திகதி சனிக்கிழமை தமிழ் மக்களின் திருப்பயணம் 15க்கும் அதிகமான மக்களோடு, ஈழத்தின் வட கிழக்கு மாநிலங்களிலிருந்து யாழ் ஆயர் பேரருட்திரு யஸ்ரின் ஞானப்பிரகாசம் ஆண்டகையும், மட்டுநகர் ஆயர் பேரருட்திரு யோசப் பொன்னையா ஆண்டகை அவர்களும் கலந்து கொண்டு திருவழிபாடுகளை தலைமை யேற்று 20க்கு மேற்பட்ட குருக்களோடு இணைந்து திருப்பலியை ஒப்புக்கொடுத்தனர்.

1987ஆம் ஆண்டு 150 இறைமக்களோடு ரோரன்ரோ தமிழ் கத்தோலிக்க சமூகத்தோடு அருட்பணி கிறிஸ்ரி யோக்கிம்பிள்ளை அடிகளாரால் ஆரம்பிக்கப்பட்ட இத்திருப்பயணம் ஆண்டுதோறும் படிப்படியாக வளர்ந்து தூய ஆரோக்கிய அன்னைப் பங்கும் இணைந்து இப்பயணம் இன்று திருத்தலத்திலே மிக அதிகமான எண்ணிக்கையில், 15,000க்கு மேற்பட்ட மக்கள் பங்கு கொள்ளும் நிகழ்வாக கணிக்கப்படுகின்றது. கத்தோலிக்க மக்கள் மட்டுமல்லாமல், கிறிஸ்தவ இந்து மக்களும் இத்திருப்பயணத்தில் கலந்து கொள்வதும் குறிப்பிடத்தக்கது. இலங்கை, இந்தியா நாடுகள் தவிர்த்து தமிழ் கத்தோலிக்க மக்கள் அதிகளவு எண்ணிக்கையில் ஒன்று கூடி திருவழிபாட்டில் கலந்து கொள்ளும் நிகழ்வு இது ஒன்றாகவே இருக்கும் என்று உறுதியாக கூறலாம்.

தமிழ் மக்களின் திருப்பயணம் தொடங்கி 24 ஆண்டுகளாக பேராலயத்தின் அருகிலுள்ள போலந்து நாட்டு மக்களினால் அர்ப்பணிக்கப்பட்ட ஒரு திருப்பீடத்தில் தமிழ் மக்களின் வழிபாடுகள் இடம்பெற்று வந்தன. 25வது ஆண்டு திருப்பயணத்தை சிறப்பிக்கும் முகமாக மிட்லன்ட் திருத்தல நிர்வாகத்தின் ஒத்துழைப்புடன் திருத்தலத்தலேயே தமிழ் கத்தோலிக்க மக்களின் பாதுகாவலியாக தாயகத்தில் விளங்கும் மருதமடு அன்னைக்கு ஒரு திருப்பீடம் அமைக்க முனைந்தார்கள். தமிழ் கத்தோலிக்க மக்களின் தாராளமான கொடையோடு திருத்தல ஆலய சுற்றாடலின் சிறப்பான இடத்தில் மருதமடு அன்னைக்கு ஓர் அழகான திருப்பீடமும் 6 அடி உயரமான வெள்ளை பழிங்கு கல்லில் உருவாக்கப்பட்ட அன்னையின் திருஉருவமும் அமைக்கப்பட்டது. இத்திருப்பீடம் கிட்டத்தட்ட தாயகத்தில் மருதமடு ஆலயத்தில் "போட்டிக்கோ" என அழைக்கப்படுகின்ற ஆலய முன்பக்க பாணியில் உருவாக்கப்பட்டுள்ளது. 25வது ஆண்டு நிறைவுத் திருப்பலியும் மாலை 4 மணியளவில் நற்கருணை ஆசீர்வாதமும் இவ் மருதமடு அன்னையின் திருப்பீடத்தில் 2012ஆம் ஆண்டு ஜுலை மாதம் 21ஆம் நாள் 14,000 மக்கள் 20க்கு மேற்பட்ட குருக்கள் பங்கு பெற்றி சிறப்பு பெற்றது.



இவ் மருதமடு அன்னையின் திருப்பீடத்திற்கு அருகாமையில் நமது தாயகத்தில் இயற்கை இடர்களினால் இறந்தவர்களுக்கும், நமது விடுதலைக்காக வித்தானவர்களுக்காகவும், அநியாமாக கொலை செய்யப்பட்டவர்களுக்காகவும் ஒரு நினைவுச்சின்னம் மெழுகுவர்த்தி தீபத்தோடு எரிவது போன்று எழுப்பப்பட்டுள்ளது. திருவழிபாடுகளுக்கு முன்னர் இவர்களை நினைவு கூர்ந்து, வருகை தந்த ஆயர்களும், புதிதாக மிட்லன்ட திருத்தலத்தின் முதல்வாராக பொறுப்பேற்றிருக்கும் அருட்பணி மைக்கல் நொக்ஸ் அவர்களும் இணைந்து செபமாலைப்பவனியின் இறுதியில் மலர் வலையம் சாத்தி நிலைவாழ்வு பெற்ற இவர்களுக்காக செபித்து வணக்கம் செலுத்தப்பட்டது.

மதியம் 12 மணியளவில் இரு ஆயர்களையும் மறைத்தல முதல்வரையும் தமிழ் மரபுப்படி ஆரத்தி எடுத்து மாலையணிவித்து மங்கலதிலகமிட்டு வரவேற்கப்பட்டனர். ஆயர்களே வருக! குருகுலமே வருக, இறைமக்களே வருக என்று தமிழ் இசை முழங்க அபிநாயாலய நடன மாணவிகள் அவ்விறை பாடலுக்கு நடனமாட பெருமகிழ்வுடன் திருப்பீடத்துக்கு அழைக்கப்பட்டனர். திருவழிபாடுகள் ஆரம்பமாகி இறைவார்த்தை வழிபாட்டு இறுதியில் மட்டுநகர் ஆயர் யோசப் பொன்னையா ஆண்டகை ஒரு சிறப்புமிக்க ஒரு மறையுரையை மிட்லன்ட் மறைசாட்சியர்பற்றியும், இரக்கத்தின் ஆண்டு பற்றியும் தமிழில் ஆற்றினார். தொடர்ந்து யாழ்ஆயர் பேரருட்திரு யஸ்ரின் ஞானப்பிரகாசம் ஆண்டகை இயேசுவின் அன்னை மரியா, திருமணம், குடும்பவாழ்வு பற்றி ஆங்கிலத்தில் அரிய மறையுரையை வழங்கினார். தொடர்ந்து காணிக்கைப் பவனி, திருப்பலி ஒப்புக்கொடுக்கப்பட்டு இறுதியில் அருள் நிறை மரியே வாழ்க எனும் மரியன்னையை புகழ்ந்து பாடும் பாடலுக்கு பக்தி வணக்கத்துடன் நடனமாடி. மறைசாட்சியர்களின் திருப்பண்டங்களை இறையாடியார்கள் முத்தி செய்யும் வாய்ப்பும் வழங்கப்பட்டது.

மிடலன்ட் மறைத்தலம் அதிக மரங்கள் நிறைந்த சோலையாகவும் பச்சை பசேலாக காட்சியளிக்குமிடமாகவும் மனதுக்கு அமைதியை தரும் சூழ்நிலையும் கொண்டதாகும். ஆயிரக்கணக்கில் மக்கள் குடும்பங்களாவும் உறவினர் நண்பர்களுடன் இம்மரங்களுக்கு கீழே இருந்து உணவுகளை பரிமாறியும் அனுபவங்களை பகிர்க்து கொண்டும் பொழுதை கழிக்கும் காட்சி தாயகத்தில் மருதமடு நினைவுகளையே கொண்டவரும்.

தொடர்ந்து மாலை 3.30 மணியளவில் மருதமடு அன்னையின் திருப்பீடத்தில் நற்கருணை எழுந்தேற்றம் செய்யப்பட்டு செபவழிபாட்டை நோர்வேயில் இருந்து வருகை தந்த அருட்பணி றெஜினோல்ட் அடிகள் நடாத்தி தொடர்ந்து மட்டுநகர் ஆயரினால் நற்கருணை ஆசீர் வழங்கப்பட்டது.

நாள் முழுவதும் திருத்தலத்தில் நிகழ்வுகள் அனைத்தும் அமைதியாகவும் பக்திபூர்வமாகவும் அனைவருக்கும் திருப்திதரும் வகையில் இடம்பெற்றதும் இன்னும் சிறப்பாக இரு ஆயர்கள் வழிபாடுகளை சிறப்பித்ததும் வரலாற்றின் பதிவுகளில் இடம்பெறவேண்டியதாகும்.



# பல்லாயிரக்கணக்கான மக்கள் கலந்து கொண்ட
# மடு திருத்தலத்தின் ஆவணித்திருவிழா



நல்லாட்சியும் நல்லிணக்கமும் மந்த நிலையில்!

பல்லாயிரக்கணக்கான மக்கள் கலந்து கொண்ட மடு திருத்தலத்தின் ஆவணித்திருவிழாவில் - மன்னார் மறைமாவட்ட அப்போஸ்தலிக்க பரிபாலகர் ஜோசப் கிங்சிலி சுவாமிப்பிள்ளை ஆண்டகை

மன்னார் மறைமாவட்டத்தில் அமைந்திருக்கும் மருதமடு திருத்தலத்தின் வருடாந்த ஆவணி மாத திருவிழா ஆவணி 15ஆம் திகதி காலை 6.15 மணிக்கு கூட்டுத் திருப்பலியாக ஒப்புக்கொடுக்கப்பட்டது.

கொழும்பு மறைமாவட்ட பேராயர் கர்தினால் மல்கம் ரஞ்சித் ஆண்டகை தலைமையில் மன்னார் மறைமாவட்ட அப்போஸ்தலிக்க பரிபாலகர் ஜோசப் கிங்சிலி சுவாமிப்பிள்ளை ஆண்டகை ,கண்டி மறைமாவட்ட ஆயர் வியானி பெர்ணாண்டோ ஆண்டகை, காலி மறைமாவட்ட ஆயர் றேமன் விக்கிரமசிங்க ஆண்டகை, அனுராதபுரம் மறைமாவட்ட ஆயர் நோபட் அன்றாடி ஆண்டகை ஆகியோர் இணைந்து திரு நாள் திருப்பலியை கூட்டுத்திருப்பலியாக ஒப்புக்கொடுத்தனர்.

நல்லாட்சியும் நல்லிணக்கமும் மந்த நிலைக்கு தள்ளப்பட்டுள்தாகவும், இதனால் விரக்தி அடையும் நிலைக்கு தள்ளப்பட்டுள்ளதாக கோடிட்டு காட்ட விரும்புகின்றேன் என மன்னார் மறைமாவட்ட அப்போஸ்தலிக்க பரிபாலகர் ஜோசப் கிங்சிலி சுவாமிப்பிள்ளை ஆண்டகை குறிப்பிட்டுள்ளார்.

மன்னார் மருத மடுத்திருத்தலத்தின் ஆவணி மாத பெருவிழா 15ஆம் நாள் பல லட்சக்கணக்கான மக்கள் முன்னிலையில் கொண்டாடப்பட்டது. இதன் போது கலந்து கொண்டு கருத்து தெரிவித்த மறை இவ்வாறு குறிப்பிட்டார்.

அவர் மேலும் உரையாற்றுகையில், எமது நாட்டின் ஏற்பட்ட ஆட்சி மாற்றத்தை தொடர்ந்து நல்லாட்சியும்,நல்லிணக்கமும் சமத்துவ சகோதரத்துவத்துடன் கூடிய உரிமையுடன் இந்த நாட்டில் வாழ்கின்ற அனைத்து மக்களுக்கும் வாழ வேண்டும் என ஆவலுடன் எதிர்பார்த்தோம் எனவும் குறிப்பிட்டுள்ளார். மறுபுரத்தில் ஓர் நம்பிக்கை ஒளிக்கீற்று தெரிகின்றது.அது தான் திருத்தந்தை பிரான்சிஸ் அவர்களின் அறிவுரை எனவும் குறிப்பிட்டுள்ளார்.



மேலும் நாட்டின் அரசியல் தலைவர்கள் குறுகிய சுய நல அரசியல் இலாபங்களை கடந்து நாட்டின் அனைத்து மக்களின் நலன்களிலும் அக்கரை செலுத்தி நீதியான நல்லிணக்கம் கொண்ட நல்லாட்சியை நிறுவ முன்வர வேண்டும் எனவும் கேட்டுக்கொண்டுள்ளார்.

திருப்பலியை தொடர்ந்து திருச்சொரூப பவனி இடம் பெற்று திருச்சொரூப ஆசீர் வாதத்துடன் நிறைவடையவுள்ளது.

இதன் போது நாட்டின் பல பாகங்களில் இருந்தும் சுமார் 7 இலட்சத்திற்கும் அதிகமானவர்கள் கலந்து கொண்டு மடு அன்னையின் ஆசி பெற்றனர்.

இதன் போது மடு திருத்தளத்தின் பரிபாலகர் அருட்தந்தை எஸ்.எமிலியானுஸ் பிள்ளை, அருட்தந்தையர்கள், அருட்சகோதரிகள், அமைச்சர்களான ரவி கருனாநாயக்க, ஜோன் அமரதூங்க, பாராளுமன்ற உறுப்பினர் செல்வம் அடைக்கலநாதன், வடக்கு அமைச்சர், வடமாகாண சபை உறுப்பினர் என பலரும் கலந்து கொண்டிருந்தனர்.

திருவிழா இறுதியில் நிதி அமைச்சர் ரவி கருணாநாயக்க மடு திருத்தலத்திற்கு அன்பளிப்பு தொகையினை வழங்கி வைத்தார்.

மேலும் சர்ச்சையாக காணப்பட்ட மன்னார் மாந்தை ஆலயத்திற்குச் சொந்தமான காணிக்கான உறுதிப்பத்திரத்தை அமைச்சர் ஜோன் அமரதூங்க மன்னார் மறைமாவட்ட அப்போஸ்தலிக்க பரிபாலகர் ஜோசப் கிங்சிலி சுவாமிப்பிள்ளை ஆண்டகை அவர்களிடம் வழங்கி வைத்தமை குறிப்பிடத்தக்கது.

ஜேர்மனி தேசத்தில் புலம்பெயர் தமிழ் மக்கள் ஒன்றிணைந்து கேவலார் மகத்தான திருப்பலி

புலம்பெயர் தமிழ் மக்கள் ஒன்றிணைந்து ஜேர்மனி தேசத்தில் கேவலார் திருப்பதியில், இலங்கை மருதமடு அன்னையின் திருநாளில் நம் நாட்டின் நிரந்தர அமைதிக்காக வேண்டுதல் செய்யும் பெருவிழா இவ்வாண்டும் ஜேர்மனி தமிழ் கத்தோலிக்க ஆன்மீக பணியகத்தால் ஒழுங்கு செய்யப்பட்டு ஆவணி மாதம் 13ஆம் திகதி சனிக்கிழமை சிறப்பாக நடைபெற்றது.
பல ஐரோப்பிய நாடுகளில் இருந்து பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட தமிழ் மக்கள் கேவலார் திருயாத்திரையில் பங்கேற்றனர்.

இந்த திருவிழாவை முன்னிட்டு திருமலை மறைமாவட்ட ஆயர் அதிவண.நோயல் இம்மானுவேல் தாயகத்தில் இருந்து வருகை தந்திருந்தார்.

கேவலார் திருவிழாவிற்க்கான ஆயத்த வழிபாடுகள் 12ஆம் திகதி வெள்ளிக்கிழமை மாலை 6 மணிக்கு செபமாலை பவனியோடு ஆரம்பமாகின. செபமாலை பவனிக்கு பின்னர் அதே நாளில் 7மணிக்கு நற்கருணை ஆராதணையும் நடைபெற்றது.

திருவிழா திருப்பலி 13ஆம் திகதி அன்று காலை 10.45 மணிக்கு, திருமலை மறைமாவட்ட ஆயர் அதிவண.நோயல் இம்மானுவேல் தலைமையில் ஒப்புக் கொடுக்கப்பட்டது.

புலம் பெயர் தமிழ் மக்களின் ஆறுதலுக்கான ஒரு பதியாகவும் உறவுகளை வளர்க்க உதவுகின்ற ஒரு மையமாகவும் கேவலார் பதி விளங்குகின்றது.

அன்னை மரியாள் தனது வாழ்வில் என்றுமே இறைவனை சார்ந்து வாழ்ந்ததைப்போல நாமும் வாழ்ந்து இறைவனின் ஆசீர்வாதத்தை பெறவேண்டும்.திருவிழா திருப்பலியின் பின்னர் மதியம் 2 மணிக்கு மேலும் ஒரு திருப்பலியும் மாலை 5.30 மணிக்கு நற்கருணை ஆசீர்வாதமும் அதனை தொடர்ந்து அன்னை மரியாளின் திருச் சுருப பவனியும் நடைபெற்றது.

இலங்கை திருநாட்டினை ஒல்லாந்து (நெதர்லாந்து) நாட்டினர் ஆட்சி செய்த பதினேழாவது நூற்றாண்டில் கத்தோலிக்க விசுவாசத்தினை பாதுகாக்க, மக்கள் மன்னார் மாவட்டத்தின் மடு என்னும் வனப்பிரதேசத்தில் தஞ்சம் புகுந்தனர்.

அம்மக்களை அன்னை மரியாள் தனது பரிந்துரையினால் பாதுகாத்தார். இதனால் அம்மக்கள் ஆண்டுதோறும் அன்னைக்கு விழா எடுத்து வருகின்றனர். இம் மடுத்திருப்பதியானது இன்றும் இலங்கையில் வாழும் பல்லின மக்களை இணைக்கும் பாலமாக விளங்குகிறது.

இம் மடு அன்னையின் திருவிழாவினை ஐரோப்பிய மண்ணில் நினைவுகூருவதற்காக, ஜேர்மன் தமிழ்க் கத்தோலிக்க ஆன்மீகப்பணியகத்தினால் 1987ஆம் ஆண்டில் இருந்து இவ்விழா கேவலார் திருப்பதியில் ஆண்டுதோறும் கொண்டாடப்படுகிறது.

இந்த ஆண்டு தமிழ் மக்களின் கேவிலார் நோக்கிய திருயாத்திரை 29து ஆண்டாகவும் சிறப்புடன் நடைபெற்றமை குறிப்பிடத்தக்கது. அடுத்த கேவலார் திருவிழா 12.08.2017 அன்று நடைபெற உள்ளது எனவும் ஆயர் தனது மறையுரையில் தெரிவித்தார்.

கனகத்தூதன்
CanaCaThuthan

# இளையோர் திருவிழிப்பு வழிபாட்டில் திருத்தந்தை









இளையோர் திருவிழிப்பு வழிபாட்டில் திருத்தந்தையின் உரை:

அன்பு இளைய நண்பர்களே, மாலை வணக்கம்! இந்த மன்றாட்டு திருவிழிப்பில் உங்களோடு இருப்பதில் மகிழ்கிறேன்! இளம்பெண் சுயனெ ஆவைவசை அவர்கள், தன் பகிர்வின் இறுதியில், "என் அன்புக்குரிய நாட்டிற்காக செபிக்குமாறு உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன்" என்று கூறினார். போர், துன்பம், இழப்பு என்று அவர் பகிர்ந்துகொண்ட அனுபவம், நம் செபத்திற்காக விண்ணப்பித்தது. இந்தத் திருவிழிப்பை செபத்துடன் துவங்குவதை விட சிறந்த வழி இருக்கமுடியுமா?

நாம் பல்வேறு கலாச்சாரங்கள், மொழிகள் கொண்ட நாடுகளிலிருந்து வந்திருக்கிறோம். நம்மில் சிலர் வாழும் நாடுகள், ஒன்றுக்கொன்று மோதல்களில் ஈடுபட்டுள்ள நாடுகளாகவும் இருக்கலாம். வேறு சிலர், அமைதியில் இருக்கும் நாடுகளிலிருந்து வந்திருக்கலாம். ஆனால், நம் அனைவருக்கும் போர் என்பது வெறும் செய்தி அல்ல, மாறாக, நம் சொந்த அனுபவமாக மாறிவருகிறது. போரினால் பாதிக்கப்பட்டுள்ள அனைத்து மக்களும் முகமும் முகவரியும் உடையவர்கள். இளம்பெண் சுயனென் அனுபவத்தைப் போல, சிரியா நாட்டின் போரினால் துன்பம் அடைந்துள்ளோர் பலர்.

நாம் காணும் போர், தொலைக்காட்சி அல்லது கைப்பேசி திரைகளில் மட்டும் தோன்றும் போர் அல்ல. அது, நம்மைச் சூழ்ந்துள்ளது. இளம்பெண் சுயனெ பயன்படுத்திய வார்த்தைகளில் சொல்லவேண்டுமெனில், நமது சகோதர சகோதரிகள் சாவினாலும், கொலையாலும் சூழப்பட்டுள்ளனர்.

அன்பு நண்பர்களே, போரினால் துன்புறும் அனைவருக்காகவும் செபிக்க நாம் இணைவோம். உடன்பிறந்தோரின் இரத்தத்தைச் சிந்துவதை எவ்வகையிலும் நாம் நியாயப்படுத்த முடியாது என்பதை புரிந்துகொள்வோம். வெளி உலகில் நடைபெறும் போரினால் துன்புறுவோருக்கு செபிக்கும் இதே வேளையில், யேவயடயைஇ ஆபைரநட ஆகியோர் பகிர்ந்துகொண்ட உள்மனப் போர்களைக் குறித்தும் செபிப்போம். யேவயடயை, ஆபைரநட, நீங்கள் இருவரும், இறைவனின் இரக்கம் ஒருவர் வாழ்வில் என்ன செய்யமுடியும் என்பதற்கு சான்றுகளாக வாழ்கிறீர்கள்.

வெறுப்பை வெறுப்பினாலும், வன்முறையை, வன்முறையாலும் வெல்வதற்கு நாம் விரும்பவில்லை. வெளியிலும், உள்ளும் நம்மைச் சூழ்ந்துள்ள போருக்கு நாம் தரும் ஒரே பதில், உடன்பிறந்த உணர்வு, குடும்பம் என்ற உணர்வு. "குடும்பம் என்பது அர்த்தமற்றது, நம் இல்லங்கள் உண்பதற்கும், உறங்குவதற்கும் தரப்பட்டுள்ள ஓர் இடம் மட்டுமே" என்று சொல்பவர்களுக்கு, இதோ, இவ்விடத்தில், உலகெங்கிலிருமிருந்து வந்து, ஒரே குடும்பமாக செபிப்பது ஒன்றே, நாம் தரும் பதில். எனவே, ஒரு குடும்பமாக நாம் இப்போது எழுந்துநின்று, ஒருவர் கரத்தை ஒருவர் பிடித்து, அனைவரும் இணைந்து, அமைதியில் செபிப்போம்.

இவ்வாறு திருத்தந்தை கூறியதும், வளாகத்தில் இருந்த அனைவரும் எழுந்து நின்று கரங்களை இணைத்து, அமைதியில் சில மணித்துளிகள் செபித்தனர். பின்னர், திருத்தந்தை தன் உரையைத் தொடர்ந்தார்.

நாம் இணைந்து செபித்த இவ்வேளையில், 'பெந்தக்கோஸ்து' நாளன்று கூடியிருந்த திருத்தூதர்களை எண்ணிப் பார்த்தேன். அச்சத்தால், கதவுகளை மூடி ஒளிந்துகொண்டிருந்த அவர்கள் நடுவே, அற்புதம் ஒன்று நிகழ்ந்தது. நெருப்பு போன்ற பிளவுற்ற நாவுகள் வடிவில், தூய ஆவியார் அவர்கள் மீது வந்ததும், அங்கு ஒரு முழுமையான மாற்றம் நிகழ்ந்தது!

நாம் மூன்று சாட்சியங்களைக் கேட்டோம். அவர்கள் கூறிய வாழ்வு அனுபவங்கள் நம் உள்ளங்களைத் தொட்டன. இயேசுவின் சீடர்கள் உணர்ந்தது போலவே, இவர்களும் தங்கள் வாழ்வில் அனைத்தையும் இழந்துவிட்டதைப் போல் உணர்ந்தனர். சீடர்களைப் போல் இவர்களும் அச்சத்தால் சூழப்பட்டனர்.

அச்சம் நம்மில் என்ன செய்கிறது? கதவுகளை மூடச் சொல்கிறது. அச்சத்தின் இரட்டைப் பிறவியான, 'செயலற்ற நிலை' நம்மை ஆட்கொள்கிறது. செயலற்று போகும்போது, பிறரைச் சந்திப்பது, நட்பு கொள்வது, கனவுகளைப் பகிர்வது, பிறரோடு நடந்துசெல்வது போன்ற



விடயங்கள் நம் வாழ்வில் தொலைந்து போகின்றன. நம்மை நாமே ஒரு சிறு கண்ணாடி அறைக்குள் பூட்டிக்கொள்கிறோம்.

வாழ்வில் மற்றொரு 'செயலற்ற நிலை' உண்டு. இது மிகவும் ஆபத்தான நிலை. நமது சுகம் 'சோஃபா'வில் உள்ளது என்று நம்பி வாழ்வதே இந்நிலை. இன்று உள்ள சில சோஃபாக்கள், நமக்கு 'மசாஜ்' செய்து உறங்க வைக்கும் சக்தி பெற்றவை.

வீடியோ விளையாட்டுக்கள், கணணி திரைகள் என்று, நம்மைக் கட்டிப்போடும் சோஃபாக்களாக பல கருவிகள் உள்ளன. வீட்டை விட்டு வெளியேறாமல், எவ்வித பயமோ, துயரோ இன்றி வாழும் வாழ்க்கை - இவை அனைத்தும், 'சோஃபா சுகங்கள்'!

இவை மிக ஆபத்தானது. நம்மையும் அறியாமல் இவை நம்மை உறங்கச் செய்துவிடுகின்றன. 20 வயதில் பணிஓய்வு பெறும் இளையோரைப் பற்றி முன்பு கூறினேன். இன்று, உறங்கச் செல்லும் இளையோரைப் பற்றி பேசுகிறேன். இவர்களது வாழ்வின் முடிவுகளை மற்றவர்கள் கரங்களில் கொடுத்துவிட்டு, இவர்கள் உறங்குகின்றனர். இந்த முடிவுகள் நல்லவை என்று சொல்வதற்கில்லை.

நான் உங்களைக் கேட்கிறேன். நீங்கள் உறங்க விரும்புகிறீர்களா? ('இல்லை' என்று இளையோர் பதில் சொல்கின்றனர்)

உங்கள் வாழ்வை மற்றவர்கள் தீர்மானிக்க விட்டு விடப்போகிறீர்களா? (இல்லை).

உங்கள் எதிர்காலத்தை நீங்களே கவனமாகத் தீர்மானித்து, அதற்காக அயராமல் உழைக்கப் போகிறீர்களா? (ஆம்)

இவ்வுலகில் எவ்வித தாக்கமும் ஏற்படுத்தாமல், வாழ்வைக் கடத்துவது, சோஃபாவில் படுத்துறங்கும் வாழ்க்கை. நம்மைச் சுற்றியுள்ள பலர், நாம் சுதந்திரமாக, உறுதியுடன் முடிவெடுப்பதை விரும்புவதில்லை. நம்மைத் தூக்கத்தில் ஆழ்த்துவதில் குறியாய் இருக்கின்றனர்.

தொடர்ச்சி பக்கம் 09

08ம் பக்கம் தொடர்ச்சி

மகிழ்வு என்பதை சுகம் என்று தவறாக எண்ணி, நம்முடைய சுகங்களைக் கூட்டிக் கொள்வது, ஒருவகை 'செயலற்ற நிலை'யே! இத்தகைய சுகத்தை, போதைப் பொருள்களில் தேடி, வாழ்வை வீணாக்குவோர் உண்டு. வேறு பலர், சுயநல பாதுகாப்பில் சுகம் காண்பது உண்டு.



இயேசு சவால்களின் ஆண்டவர். 'இன்னும் சிறந்த' என்ற, நிரந்தரமான உணர்வுக்கு, அவர் ஆண்டவர். அவரைத் தொடர்வதற்கு, துணிவு தேவை, சோஃபாவுக்குப் பதிலாக, இரு காலணிகள் தேவை. அவரைத் தொடர்ந்து, 'மதியிழந்த' வண்ணம் புதிய பாதைகளில், செல்லத் துணிவு வேண்டும். பசித்தோர், தாகமாயிருப்போர், ஆடையின்றி இருப்போர், நோயுற்றோர், சிறையில் இருப்போர், நாடுவிட்டு நாடு துரத்தப்படுவோர் இவர்களை இந்தப் பாதையில் சிந்திப்போம்.

**இவ்வுலகில் எவ்வித தாக்கமும் ஏற்படுத்தாமல், வாழ்வைக் கடத்துவது, சோ.:.பாவில் படுத்துறங்கும் வாழ்க்கை. நம்மைச் சுற்றியுள்ள பலர், நாம் சுதந்திரமாக, உறுதியுடன் முடிவெடுப்பதை விரும்புவதில்லை. நம்மைத் தூக்கத்தில் ஆழ்த்துவதில் குறியாய் இருக்கின்றனர்.**

இத்தகைய வாழ்வு எல்லாருக்கும் உரிய வாழ்வு அல்ல, தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சிலருக்கே இது உரியது என்று நீங்கள் சொல்லக்கூடும். ஆம், தங்கள் வாழ்வைப் பிறரோடு பகிர்ந்துகொள்ளும் ஒரு சிலருக்கே இந்த வாழ்வு அமையும்.

இத்தகைய வாழ்வில் பங்கேற்க நாம் அனைவரும் அழைக்கப்பட்டுள்ளோம். இறைவன் உங்கள்



ஒவ்வொருவரையும் அழைக்கிறார். உங்கள் ஒவ்வொருவரிடமிருந்தும் எதிர்பார்க்கிறார், உங்கள் ஒவ்வொருவர் மீதும் நம்பிக்கை கொண்டுள்ளார். நம் வாழ்வில் மூடப்பட்டுள்ள கதவுகளைத் திறக்க அவர் வருகிறார். கனவு காண நம்மைத் தூண்டுகிறார். இவ்வுலகம் மாறும் என்பதைப் பார்ப்பதற்கு நம்மைத் தூண்டுகிறார். நம்முடைய மிகச் சிறந்தவற்றை அவருக்குக் கொடுத்தாலன்றி, இவ்வுலகம் மாறாது. இதுவே நமக்கு முன் உள்ள சவால்.

சோஃபாக்களில் அமர்ந்து உறங்கும் இளையோர் தேவையில்லை, காலணிகள் அணிந்து புறப்பட தயாராக உள்ள இளையோர் இவ்வுலகிற்குத் தேவை. விளையாட்டில் முன்னணி வீரர்களாக



களம் இறங்குவோர் தேவை, விளையாட்டுத் திடலின் ஓரத்தில் அமர்ந்து வேடிக்கை பார்ப்பவர்கள் தேவையில்லை. உங்கள் கரங்கள், என் கரங்கள் அனைத்தும் ஒப்புரவில் இணைந்து உருவாக்கும் உலகம் நமக்குத் தேவை. இத்தகைய உலகை உருவாக்க தயாரா? (தயார் என்று இளையோர் பதில் சொல்கின்றனர்).

இன்றைய உலகம் நம்மிடமுள்ள பிரிவுகளை, வேறுபாடுகளை வெளிச்சமிட்டுக் காட்டுவதில் முனைப்பாக உள்ளது. வயதில் முதிர்ந்த எங்களுக்கு இளையோராகிய நீங்கள் சொல்லித் தரவேண்டியது, வேற்றுமையிலும் ஒற்றுமையாக வாழமுடியும் என்ற பாடம். சுவர்களை எழுப்புவதற்குப் பதில், பாலங்களை கட்டுவது எளிது என்பதை, இளையோர் இன்றைய உலகிற்குச் சொல்லித் தரவேண்டும்.

நாம் கட்டவேண்டிய முதல் பாலம் என்னவென்று தெரியுமா? இந்த பாலத்தை இப்போதே, இங்கேயே நம்மால் கட்ட முடியும். அதுதான், நம் அருகில் இருப்பவரை நோக்கி கரங்களை நீட்டி, அவர் கரங்களைப் பற்றுவது. நாம் இந்தப் பாலத்தை இப்போது கட்டுவோம். உங்கள் அருகில் இருப்பவர் கரங்களைப் பற்றுங்கள்.

இவ்வாறு திருத்தந்தை கூறியதும், அச்சத்துக்கத்தில் இருந்த அனைவரும் ஒரு சங்கிலித் தொடர்போல கரங்களைக் கோர்த்து நின்றது மிக அழகாக இருந்தது. திருத்தந்தை தொடர்ந்து பேசினார்.

இப்போது நாம் உருவாக்கியிருக்கும் இந்த மனிதப் பாலம், இன்னும் பல பாலங்களை உருவாக்க ஓர் ஆரம்பமாக அமையட்டும். வழியாக, வாழ்வாக, உண்மையாக விளங்கும் இயேசு, நம் ஒவ்வொருவரையும் அழைக்கிறார். இவ்வுலக வாழ்வில் தனிப்பட்டத் தடங்களைப் பதிக்க நம்மை அழைக்கிறார். பிரிவுகள், வெறுப்பு, வெறுமை என்ற பாதைகளை விட்டு விலகி, உண்மைப் பாதையில் நடக்கச் சொல்லி நம்மை அழைக்கிறார். நம் பதில் என்ன? இவ்விதம் செய்யத் தயாரா?

இவ்வாறு திருத்தந்தை கேட்க, அனைவரும் 'ஆம்' என்று ஒரே குரலில் சொன்னார்கள். இறுதியில், "உங்கள் கனவுகளை இறைவன் ஆசீர்வதிப்பாராக!" என்று தன் உரையை நிறைவு செய்தார் திருத்தந்தை பிரான்சிஸ்.

# பெண் தியாக்கோன்கள் திருஅவையில் அறிமுகம்

பெண் தியாக்கோன்கள் திருஅவையில் அறிமுகம் குறித்து ஆராய திருப்பீடத்தில் புதிய அவை.

திருத்தந்தையால் நியமனம்.

திருஅவையில் பெண்களை தியாக்கியோன்களாக நியமிப்பது குறித்து ஆய்வு செய்வதற்கு, புதிய அவை ஒன்றை, உருவாக்கியுள்ளார் திருத்தந்தை பிரான்சிஸ்.

ஏற்கனவே, இவ்வாண்டு மே மாதம் 12ம் தேதி, வத்திக்கானில், உலக பெண் துறவு சபைகளைச் சார்ந்த 900 உலகத்தலைவர்கள் தமது 3 ஆண்டுகளுக்கு ஒரு தடைவ ஒன்று கூடும் மாநாட்டின் இறுதியில் திருத்தந்தையைச் சந்தித்த போது, இவ்விடயமாக பல வினாக்களை திருத்தந்தையிடம் விடுத்தனர். திருஅவையில் பெண் தியாக்கோன்கள் பற்றி திருத்தந்தை திறந்த மனதுடன் செயல்படுவது உலகளாவிய திருஅவையில் பாரிய வரலாற்று மாற்றத்தை எற்படுத்தலாம் என்றாலும் திருச்சபை பெண்களை தியாக்கோனாக திருநிலைப்படுத்துவது இல்லை.

தூய 2ஆம் யோண் பவுல் 1994ஆம் ஆண்டு வெளியிட்ட Ordinatio Sacerdotalis எனும் திருமுக மடலில் பெண்களை குருக்களாக திருநிலைப்படுத்த திருஅவைக்கு எந்த அதிகாரமும் இல்லையென்று இயேசு தனது 12 சீடர்களையும் ஆண்களாகவே தேர்ந்து கொண்டார் என மேற்கோள் காட்டி திருஅவையில் பெண்களை தியாக்கியோன்களாக திருநிலைப்படுத்துவதை நிராகரித்தார்.





இருந்தபோதிலும் திருஅவை வரலாற்றாசிரியர்கள் ஆதித்திருச்சபையில் பெண்கள் தியாக்கியோன்களாக பணிபுரிந்தமைக்கு போதுமான ஆதாரங்கள் உள்ளன எனவும் திருத்தூதர் பவுல் ரோமையருக்கு எழுதிய திருமடலில் (ரோமை 16:1-4)

நம் சகோதரியாகிய பெயிபாவைக் குறித்து நற்சான்று அளிக்க விரும்புகிறேன் இவர் கெங்கிரேயாவில் இருக்கும் சபையில் திருத்தொண்டராய் இருக்கிறார்.



2 இறை மக்களுக்கு ஏற்றவாறு ஆண்டவரின் பெயரால் அவரை வரவேற்று, அவருக்குத் தேவையான உதவி செய்யுங்கள். ஏனெனில் அவரும் பலருக் உதவி செய்திருக்கிறார் எனக்கும் உதவி செய்திருக்கிறார்.

3 கிறிஸ்து இயேசுவுக்காக என்னோடு சேர்ந்து உழைக்கின்ற பிரிஸ்காவுக்கும் அக்கிலாவுக்கும் என் வாழ்த்து.

4 அவர்கள் என் உயிரைக் காக்கத் தலைகொடுக்கவும் முன்வந்தார்கள். அவர்களுக்கு நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். நான் மட்டும் அல்ல, பிற இனத்துத் திருச்சபைகள் அனைத்துமே நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றன.

6 உங்களுக்காக பாடுபட்டு உழைத்த மரியாவுக்கு வாழ்த்துத் தெரிவியுங்கள்.

இவ்வாறு தெளிவாக குறிப்பிடப்பட்டுள்ளது.
பெண் துறவிகள் எழுப்பிய வினாவுக்கு திருத்தந்தை பிரான்சிஸ் நான் உங்கள் சிந்தனையோடு சேர்ந்து விடைகாண முயல்கின்றேன் என்று கூறி இது குறித்து ஆராயப்படும் என உறுதி அளித்திருந்த நிலையில், இப்புதிய அவை குறித்த அறிவிப்பு வெளியிடப்பட்டுள்ளது.

விசுவாசக்கோட்பாடுகளுக்கான திருப்பேராயத்தின் செயலர், இயேசு சபை பேராயர் Luis Francisco Ladaria Ferrer. அவர்களின் தலைமையில் அமைக்கப்பட்டுள்ள இப்புதிய அவையில், திருஅவையியல் (Ecclesiology), திரு அவைத்தந்தை இறையியல் (Patristic Theology), ஆன்மீகம், ஆகியவற்றில் வல்லுனராக விளங்கும் ஆறு அருள்பணியாளர்கள், இரு அருள் கன்னியர்கள், 4 பெண் பேராசிரியர்கள் என 12 பேர் அங்கத்தினர்களாக நியமிக்கப்பட்டுள்ளனர். இவர்கள் வத்திக்கான், இத்தாலி, இஸ்பெயின், பெல்ஜியம், ஆஸ்திரியா, அமெரிக்க ஐக்கிய நாடு ஆகிய நாடுகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டு உள்ளனர்.

இவ் அவை குறித்த அறிவிப்பு திருத்தந்தையின் ஆழ்ந்த செபத்தியானத்தோடு முதிர்ந்த சிந்தனையின் வெளிப்பாடே என இறையியலாளர்கள் நோக்குகின்றனர். ஆதித்திருச்சபையில் பெண் தியாக்கோன் பற்றிய ஆய்வையும் அதன் வரலாற்றையும் விரிவாக அறிந்து கொள்ள இது ஒரு சந்தர்ப்பம் என்கின்றனர் ஆய்வாளர்கள்.

2ஆம் வத்திக்கான் சங்கம் 62-65ஆம் ஆண்டுகளில் கூடி திருமணமான பொதுநிலையினர் 35வயது கடந்த பின்னர் 4 ஆண்டுகள் பயிற்சியியோடு நிரந்தர தியாக்கோன்களாக திருநிலைப் படுத்தப் பட்டு பணிபுரிய வழிகோழியது. இவ் வறிமுகம் திருஅவைக்கு பல்வேறு நன்மைகளை அளித்துள்ளது.

10ஆவது தடவை
10th Time

## தூய நாடு (இஸ்ரேல்), பலஸ்தீனம், ஜோர்தான் நாடுகளுக்கு திருப்பயணம் 2016 நவம்பர் 24 - டிசம்பர் 4
## Pilgrimage to Holy Land, Palestine and Jordan 2016, November 24 - December 4

இஸ்ரவேலரின் விடுதலைப்பயணத்திலிருந்து இயேசுவின் விண்ணேற்பு வரை, மீட்பின் வரவாற்றில் சிறப்பு பெற்ற 100 க்கு மேற்பட்ட திருத்தலங்கள்(From Exodus to Jesus Ascension)

எமது ஆன்மீகத்தின் வேர்களைக் தேடி

இயேசு பிறந்த, வாழ்ந்த புதுமைகள் புரிந்த, போதித்த, பாடுகள் பட்ட, மரித்த, உயிர்த்தெழுந்த, விண்ணகம் சென்ற, தூய ஆவியினை திருத்தூதர்கள் பெற்ற தூய இடங்களோடு, அன்னை மரியா பிறந்து வாழ்ந்த விண்ணகம் எடுத்துச் செல்லப்பட்ட இடங்களும் திருமுழுக்கு யோவானின் பிறந்து வாழ்ந்த போதித்த இடங்களும் இன்னும் பல விவிலியத்தில் ஆன்மீகம் சார்ந்த தலங்கள்.

வாழ்க்கையில் ஒரே தடவை இத்திருப்பயணத்தில் இணையுங்கள்
இத்திருப்பயணத்தின் அனுபவங்களும் நினைவுகளும் என்றும் உங்கள் உள்ளத்தை விட்டு அகலாது
*(You will never be the same)*

### மீட்பின் வரலாற்றின் மையங்களை நோக்கிய தூய பயணம்

**1ஆம் நாள்** ~ நொவம்பர் 24, 2016 வியாழன் *(Departure from Toronto to Amman)* ரொறன்ரோ விமான நிலையத்தில் இருந்து ஜோர்தான் தலைநகரான அம்மான் விமான நிலையத்தை அடைதல்

**2ஆம் நாள்** ~ நொவம்பர் 25, 2016 வெள்ளி - *Day 2/ (Arrival at Amman-Jordan.)*

**3ஆம் நாள்** ~ நொவம்பர் 26, 2016 சனி ~ *Day 3/* பெற்றா நகரம் ~ உலகத்தில் அதிசய நகரம். 2500 ஆண்டுகளுக்கு முன்னர் உருவானது *(City of Pedra-Red City)* எசாவு வாழ்ந்து மரித்த இடம் ஏதோம் மக்கள் வாழ்ந்த நகரம். (தொடக்க நூல் 35~36/ *Genesis 35-36)*

**4ஆம் நாள்** ~ நொவம்பர் 27, 2016 ஞாயிறு ~ *Day 4/ (Mount Nebo)* மோயீசனின் இறுதி நாட்கள் (இணைச்சட்டம் 34) நெபோவில் திருப்பலி மாலை இஸ்ரேல் நாட்டுக்குள் செல்வோம். *(Euteronomy 34)*

**5ஆம் நாள்** ~ நொவம்பர் 28, 2016 திங்கள் ~ *Day 5/ (Nazerth-Cana - Mt.Tabor-Caesarea Philipi.)* நாசரேத்து மரியாவுக்கு மங்களம் சொன்ன ஆலயம் (லூாக் 1:26~38)~ தபோர் மலை (மத் 17:1~13) மரியாளின் கிணறு~ தூய வளன் ஆலயம் கானாவூரில் திருமண வாக்குறுதிகளை புதிப்பித்தல்.

திருக்குடும்பம் வாழ்ந்த வீடு (யோவான் 2.1~10), செசரையா ~ பிலிப்பி (மத்: 16:13~20) கானாவூரில் திருப்பலி *Mt., Mary's well, St. Joseph's church, Golan Heights / Upper Galilee, Home of the Holy Family.*

**6ஆம் நாள்** ~ 29~11~2016 செவ்வாய் - *Day 6/ Capernaum- Galilee-Mt. Sermon* மலைப்பிரசங்க ஆலயம் (மத் 5.1)~ அப்பம் பலுகிய ஆலயம் – கப்பர்நாவும் செபக்கூடம். லூாக் 4:31~33 – பேதுருவின் வீடு (மத் 8: 5~13) – கலிலேயாக்கடலில் பயணம் ~ பேதுருவின் மீனோடு மதிய உணவு – பேதுருவை திருச்சபையின் தலைவராக தேர்ந்தெடுத்த இடத்தில் ஆலயம் (மலைப்பிரசங்க ஆலயத்தில் திருப்பலி) *Mount of Beatitudes / Tabgha/ Sea of Galilee/ Church of Multiplication/ Capernaum Primacy of Peter/ Synagougue Boating in the sea of Galilee/ Lunch with Peter Fish*

**7ஆம் நாள்**~ 30~11~2016 புதன் - Day 7/ (Baptism-renewal at Jordan River -Bath in Dead Sea/Masada/Qumran) யோர்தான் நதிக்கரையில் திருமுழுக்கு வாக்குறுதிகளை புதிப்பித்தல், கும்றான், சாக்கடல், மாசாடா மலை (யோர்தான் நதிக்கரையில் திருப்பலி)

**8ஆம் நாள்** 01~12~2016 வியாழன் ~ *Day 8/ (Ein Karem / Bethlehem)* எலிசபேத்தம்மாள் ஆலயம் ~ திருமுழுக்கு யோவான் இல்லம்~ (லூாக் 1:29~30) பெத்திலகேம் கிறிஸ்து பிறப்பு ஆலயம் ~ இடையர்களுக்கு செய்தி சொன்ன இடம் (லூாக். 2:8.20)~ வெள்ளை குறோற்றோ பெத்திலகேமில் திருப்பலி) *Church of the Visitation / Church of the Nativity Shepherd s Field White Grotto House of John the Baptist.*

**9ஆம் நாள்** 02~12~2016 வெள்ளி - *Day 9/ (Jerusalem/Sethsemane)*
இயேசு விண்ணகம் சென்ற இடம், பரலோகமந்திர ஆலயம், ஜெத்சமனி, மரியாளை அடக்கம் செய்த ஆலயம், இராவுணவு இடம்பெற்ற இடம், தாவீதின் கல்லறை, இராயப்பர் இயேசுவை மறுதலித்த இடம், மரியா உறங்கும் ஆலயம், புலம்பல் மதில் (ஜெத்சமனியில் திருப்பலி *Paternostre Church Church of All Nation Mount Zion – Place of Last Supper Peter Galicanto, Dormizon Church, King David Tomb, Wailing Wall, Church of Ascension Mt Olives)*

**10ஆம் நாள்** 03~12~2016 சனி - *Day 10/ (Galvary - Via Dolorosa)*
மரியா பிறந்த வீடு, பெத்சாயிதா குளம், போஞ்சு பிலாத்தின் அரண்மனை, சிலுவைப்பாதை 14 நிலைகள் இடம், கல்வாரி, இயேசுவின் கல்லறை (கல்வாரியில் திருப்பலி) *Pool of Bethesda Church of Holy Sepulcher Christian Quarter St Anne s church Jesus Tomb.*

**11ம் நாள்** 04~12~2016 ஞாயிறு - *Day 11 / (Emmavus- Departure to Toronro)* எம்மாவுஸ் (திருப்பலி) இயேசு உயிர்ப்புக்கு பின் எம்மாவுஸ் நகரில் சீடர்களுக்கு தோன்றினார் *(Emmavus)* தெல் அவி விமான நிலையம் சென்று ரோரன்ரோ திரும்புதல். *Departure from Tel Aviv to Toronto (Direct Flight)*



Never Miss this Opportunity!

ஆகஸ்ட் 22ஆம் திகதிக்கு முன்னர் முன் பணத்துடன் ($2000) உங்கள் பதிவுகளை மேற்கொள்ளுங்கள். விமான, உள்ளூர் பயணங்கள், காலை மதிய இரவு உணவு, விடுதி, அனுமதிச்சீட்டுகள் அனைத்தும் 3300 டொலர்கள் மட்டுமே. Please Register by August 22nd 2016 with advance payment of $2000. The Cost is $ 3300/= Includes Air Travel, local travel, all three meals, 4* Hotel Accommodations, All Admission fees, with excellent guide with most famous spiritual director.

அனைத்து விபரங்களுக்கும் அழையுங்கள் அன்ரன் சின்னராசா: 416 300 7026

For more info Please call Anton Sinnarasa: 416-300-7026 or email: anton.philip@gmail.com

# முதற் கிறிஸ்தவ நாடான அர்மேனியாவுக்குத் திருத்தந்தையின் திருப்பயணம் யூன் 25 - 27, 2016

















போர்த்துக்கல்லில் பாத்திமா அன்னை 3 சிறுவர்களுக்கு காட்சி கொடுத்து

# 100 ஆண்டுகள் நிறைவு

## பல கோடி மக்கள் தரிசித்த அன்னையின் புகழ் பெற்ற திருத்தலங்கள்

## 1917 - 2017 திருப்பயணம்

## மே 21 - மே 29, 2017

2017ஆம் ஆண்டு மே 21ஆம் திகதி தொடக்கம் மே 29 ஆம் திகதி வரை
கனடாவிலிருந்து 100 திருப்பயணிகளுடன் 2017 ஆம் ஆண்டு மே மாதம் பாத்திமா -

லூர்து அன்னையின் திருத்தலங்களுக்கு ஆன்மீக திருப்பயணம்.
போர்த்துக்கல் - பாத்திமா அன்னையின் திருத்தலத்தில் 4 நாட்கள் ( மே 23 - 26 )
பிரான்சில் - லூர்து அன்னையின் திருத்தலத்தில் 3 நாட்கள் ( மே 27 - 29)




ஆயரும் பல குருக்களும் இத்திருப்பயணத்தில் கலந்து கொண்டு தினமும் தமிழில் அன்னை காட்சி கொடுத்த ஆலயத்தில் தமிழில் திருப்பலியும், சிறப்பான வழிபாடுகளையும், ஆன்மீகம், கருத்தாளம் மிக்க அரிய மறையுரைகளையம் வழங்குவார்கள். உங்கள் வாழ்வில் என்றுமே மறக்க முடியாத ஒரு ஆன்மீக அனுபவத்தை பெற்றுக் கொள்வீர்கள்.






**லூர்து அன்னையின் திருத்தலத்தில்**
- லூர்து அன்னை தூய பேர்னடேற்றுக்கு காட்சி கொடுத்த இடம்
- தூய பேர்னடேற் பிறந்து வாழ்ந்த வீடு
- தூய பேர்னடேற் திருமுழுக்கு பெற்ற பங்கு ஆலயம்
- லூர்து அன்னைக்காக கட்டியெழுப்பப்பட்ட இரு பேராலயங்கள் (ஒன்று நிலத்திற்க்கு கீழ்)
- அனைத்து மக்களும் வியக்கும் வண்ணம் திருஉருவங்கள் அடங்கிய சிலுவைப்பாதை செய்யும் மலை
- நூதன சாலை இன்னும் பல இடங்கள்

**பாத்திமா திருத்தலத்தில் ( மே 23 - 26 )**
- தேவதாய் யசிந்தா, லூசியா, பிரான்சிஸ்கோ ஆகியோருக்கு காட்சி கொடுத்த தலங்கள்.
- மூன்று சிறுவர்களும் பிறந்து வாழ்ந்த வீடுகள்
- திருமுழுக்கு பெற்ற ஆலயம்
- அவர்களின் கல்லறைகள்
- அன்னை காட்சி கொடுத்த இடத்தில் கட்டப்பட்ட ஆலயம்
- அன்னையின் பெயரால் எழுப்பப்பட்ட பேராலயம்
- காவல் தூதர்கள் சிறுவர்களுக்கு தோன்றிய இடம்
- கடந்த 100 ஆண்டுகளான அன்னைக்கு காணிக்கையாக கொடுக்கப்பட்ட பொன் கீரிடங்கள் தொடக்கம் திருத்தந்தையர்கள் வழங்கிய காணிக்கைகள் உட்பட நீங்கள் அதிசயப்படக்கூடிய பின்னணிகளோடு அன்னை பெற்ற பரிசுகள் அடங்கிய நூதன சாலை இன்னும் பல

விமானச்செலவு, உள்ளூர்ப்பயணம், 4 நட்சத்திர விடுதி, காலை இரவு உணவு, அனைத்தும் உட்பட 1600 டொலர்கள் மட்டுமே. அடுத்த ஜனவரி (2017) மாதத்திலிருந்து 1000 டொலர்களை முன்பணமாக செலுத்தி உங்கள் பெயரை பதிவு செய்து கொள்ளுங்கள்.

அனைத்து தகவல்களுக்கும் அழையுங்கள் அன்ரன் [illegible] (Cell) 416 300 7026
Email : anton.philip@gmail.com

# தூய ஆரோக்கிய அன்னைப்பங்கின் வருடாந்த திருவிழா





## ஞாயிற்றுக்கிழமை
## 11 September 2016

மாலை 04:30 மணிக்கு திருப்பலி
அன்னையின் திருவுருவ உலா

**8, 9, 10ஆம் திகதிகளில் திருநாளின் ஆயத்த நாட்கள்**

07:00 செபமாலை /**Rosary**
07:30 கூட்டுத்திருப்பலியும் /**Holy Mass**

**131 Birchmount Road. Scarborough ON. M1N 3J7**









# கத்தோலிக்க செய்திகள்

## இது இரக்கத்தின் காலம் : நயீன் நகர வாயிலும், புனிதக் கதவும்



திருத்தந்தை பிரான்சிஸ் அவர்கள் வழங்கிய புதன் மறைக்கல்வி உரையில், 'நயீன் நகர வாயில்' என்ற உருவகத்தை, 'புனிதக் கதவு'க்கு ஒப்புமைப்படுத்தி, மிக அழகான எண்ணங்களைப் பகிர்ந்து கொண்டார்:

"இந்த யூபிலியின்போது, திருப்பயணிகள், புனிதக் கதவை, இரக்கத்தின் கதவை கடந்து செல்லும்போது, நயீன் நகர வாயிலில் நிகழ்ந்ததை (லூக்கா 7:11-17) நினைவில் கொள்வது நல்லது. கண்ணீரோடு தன்னைக் கடந்து சென்ற தாயை இயேசு கண்டதும், அந்தத் தாய், அவரது உள்ளத்திற்குள் நுழைந்துவிட்டார்! ஒவ்வொருவரும் புனிதக் கதவருகே செல்லும்போது, அவரவர் வாழ்வைச் சுமந்து செல்கிறோம். அந்த வாழ்வின் மகிழ்வுகள், துயரங்கள், திட்டங்கள், தோல்விகள், ஐயங்கள், அச்சங்கள் அனைத்தையும் இறைவனின் கருணைக்குமுன் சமர்பிக்கச் செல்கிறோம். புனிதக் கதவருகே, ஆண்டவர் நம் ஒவ்வொருவரையும் சந்திக்க வருகிறார். 'அழாதீர்' (லூக்கா 7:13) என்ற ஆறுதல்தரும் சொல்லை நம் ஒவ்வொருவரிடமும் கூறுகிறார்.

மனித குலத்தின் வலியும், கடவுளின் கருணையும் சந்திக்கும் கதவு இது. இதை நாம் எப்போதும் நினைவில் கொள்வோம். இக்கதவை நாம் கடந்து, இறைவனிடம் செல்லும்போது, நயீன் நகர இளைஞனிடம் சொன்னதுபோல், 'நான் உனக்குச் சொல்கிறேன், எழுந்திடு' (லூக்கா 7:14) என்று நம் அனைவரிடமும் இறைவன் சொல்கிறார்.



எழுந்து நிற்பதெற்கென்று இறைவன் நம்மைப் படைத்தார். 'ஆனால், நான் அடிக்கடி வீழ்கிறேனே!' என்று நாம் நினைக்கலாம். இயேசு நம்மிடம் எப்போதும் சொல்வது இதுதான்: 'எழுந்திடு! முன்னே செல்!' நாம் புனிதக் கதவைக் கடந்து செல்லும்போது இயேசு கூறும் 'எழுந்திடு' என்ற கட்டளைக்குச் செவிமடுப்போம். அந்தச் சொல் நம்மை, சாவிலிருந்து வாழ்வுக்கு அழைத்துச் செல்லும்"

நயீன் நகர கைம்பெண்ணைத் தேடிச்சென்று தன் இரக்கத்தை வெளிப்படுத்திய இயேசுவைப்போல், மக்கள் வாழும் இடங்களிலேயே புனிதக் கதவுகள் நிறுவப்பட்டு, திறந்திருக்கும் என்ற ஆறுதல் தரும் எண்ணத்தை, இந்த யூபிலி ஆண்டில் மக்கள் மனதில் ஆழப்பதித்துள்ளார், திருத்தந்தை. நயீன் நகர வாயிலையும், புனிதக் கதவையும் இணைத்து, திருத்தந்தை வழங்கிய மறைக்கல்வி உரையின் கருத்துக்கள், நம்மை மீண்டும் இரக்கத்தின் கதவை நோக்கி அழைத்து வந்துள்ளன.

## திருமண வாழ்வைப் பற்றி திருத்தந்தையின் அறிவுரைகள்

அனைத்து நிகழ்வுகளையும் முடித்தபின், திருத்தந்தை பிரான்சிஸ் அவர்கள், கிரக்கோவ் பேராயர் இல்லத்திற்குத் திரும்பிய வேளையில், அவ்வில்லத்திற்கு முன் மக்கள் கூடியிருந்து, பாடல்கள் பாடிக் கொண்டிருந்தனர். இரவு உறங்கச் செல்வதற்குமுன் திருத்தந்தை பிரான்சிஸ் அவர்கள், அவ்வில்லத்தின் மேல்மாடத்தில் தோன்றி மக்களை வாழ்த்தியதால், இன்றும் திருத்தந்தை தங்களைக் காண வருவார் என்ற எதிர்பார்ப்புடன் மக்கள் கூடியிருந்தனர். கூடியிருந்த மக்களைக் காண மேல்மாடத்தில் தோன்றிய திருத்தந்தை பிரான்சிஸ் அவர்கள், திருமண வாழ்வைப் பற்றி ஒரு சில கருத்துக்களைப் பகிர்ந்துகொண்டார். அவர் வழங்கிய உரை இதோ:

இங்கு கூடியிருப்போரில் பலர் இளம் தம்பதியர் என்பதை உணர்கிறேன். இன்றைய உலகில் திருமணம், மற்றும் குடும்ப வாழ்வை மேற்கொள்வதற்கு மிகுந்த மன உறுதி தேவை. இந்தத் துணிவும், உறுதியும் கொண்ட உங்களை வாழ்த்துகிறேன்.

## குடும்ப வாழ்வை சரிவர நடத்திச் செல்வதற்கு, மூன்று வார்த்தைகள் உதவி செய்யும். அவை அனுமதி, நன்றி, மன்னிப்பு.



கணவனும், மனைவியும் பல்வேறு திட்டங்களை மேற்கொள்ளும்போது, ஒருவர் ஒருவரைக் கலந்தாலோசித்து, அனுமதி பெறுவது நல்லது.

ஒருவர் ஒருவருக்கு நன்றி சொல்வதும் அழகான பழக்கம். உங்களை திருமண உறவில் இணைத்த இறைவனுக்கு நன்றி சொல்வதுபோல், ஒருவர் ஒருவருக்கும் நன்றி சொல்வது அழகு.

மன்னிப்பு கேட்பது, மிகக் கடினமான ஒரு செயல். மனித வாழ்வில், குறிப்பாக, திருமண வாழ்வில் தவறுகள் நிகழும். மன்னிப்பை கேட்பதும், தருவதும் இத்தவறுகளைச் சீர் செய்வதற்கு பெரிதும் உதவியாக இருக்கும்.

சிலவேளைகளில், கருத்து வேறுபாடுகள் உருவாகும்போது காரசாரமான விவாதங்கள் தோன்றும் கோபமான வார்த்தைகளும், சில வேளைகளில் தட்டுகள், பாத்திரங்களும் பறக்கும். கவலைப்படாதீர்கள்! இவை இயல்பாக நடப்பவையே! ஆனால், ஒன்றை மட்டும் நான் வலியுறுத்திக் கூற விழைகிறேன். இரவு, சமாதானம் செய்யாமல் உறங்கச் செல்லாதீர்கள். இல்லையென்றால், அடுத்தநாள் தொடரும் பனிப்போர், ஆபத்தாக இருக்கும். சமாதானம் செய்வதற்கு, பெரிய சொற்பொழிவுகள் தேவையில்லை. ஒரு வார்த்தை, ஓர் அடையாளச் செயல் போதும்.

இங்கு கூடியுள்ள அனைத்து குடும்பங்களுக்காகவும், குறிப்பாக, புதிதாக திருமண வாழ்வைத் துவக்கியுள்ளவர்களுக்காகவும் செபிப்போம். அனைவரும் இணைந்து அன்னை மரியாவின் வழியே செபிப்போம்.

என்று கூறிய திருத்தந்தை பிரான்சிஸ் அவர்கள், அனைவருக்கும் தன் ஆசீரை வழங்கியபின், அவர்களிடம், எனக்காக செபிக்க மறவாதீர்கள். உங்கள் அனைவருக்கும் இரவு வணக்கம், நன்கு உறங்குங்கள் என்று கூறி முடித்தார். இதுவே திருத்தந்தையின் வியாழன் தின கடைசி நிகழ்வாகும்.

## The Church needs passionate missionaries, not bureaucrats: Pope at Sunday Angelus



At the Sunday Angelus, the pope asked for a brave Church that will not stay within predetermined walls and barriers, but would dare to go down unexplored and uncomfortable paths. He praised priests and religious who do this, even at the risk of their own life.

**POPE FRANCIS**

"Their exemplary witness reminds us that the Church doesn't need bureaucrats and diligent office workers, but impassioned missionaries consumed by the ardour of bringing the consoling words of Christ and His grace to all people."

Pope Francis encouraged Christians to entrust their heart to the fire of the Holy Spirit, a force that transforms from within and eliminates all human miseries. He insisted that, especially today, there's a need for disciples who are able to reach those most in need.

**POPE FRANCIS**

"Now more than ever, there's a need for priests, consecrated people and lay Christians to feel compassion and reach out like good neighbours to others, putting themselves in front of material and spiritual poverty, thus characterizing the way of evangelization and mission with the healing rythym of proximity."

Finally, he requested that a special closeness with those who suffer most, such as the homeless, the needy or refugees is demonstrated within the Church.

**கனகதூதன் பணி**
**ஒரு மறைத் தூது பணி,**
**இப்பணியில்**
**உங்கள் பங்களிப்பு**
**என்ன?**

# போனியே பூங்காவில் நிகழ்ந்த சிலுவைப்பாதை

போலந்து நாட்டில் இடம்பெற்ற உலக இளையோர் மாநாட்டில் போனியே பூங்காவில் நிகழ்ந்த பொருள் மிகுந்த சிலுவைப் பாதை பக்திமுயற்சி

உலக இளையோர் நாள் நிகழ்வுகளின் ஓர் உச்ச நிகழ்வாக அமைவது, சிலுவைப் பாதை நிகழ்ச்சி. போனியே பூங்காவில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த இச்சிலுவைப் பாதை நிகழ்ச்சி, சோகம் நிரம்பிய ஒரு நிகழ்வாக அமையாமல், ஆடல், பாடல்களுடன், இன்றைய சமுதாயத்திற்குத் தேவையான கருத்துக்களை வலியுறுத்தும் வகையில் அமைக்கப்பட்டிருந்தது. 6 இலட்சம் பேர் பங்குபெறுவர் என்று எதிர்பார்த்திருந்த இந்நிகழ்வில், 8 இலட்சத்திற்கும் அதிகமானோர்



பங்கேற்றனர் என்று ஊடகங்கள் கூறியுள்ளன.

இரக்கத்தின் சிறப்பு யூபிலி ஆண்டின் முக்கியப் பரிந்துரையாக வழங்கப்பட்டுள்ள உடல் சார்ந்த 7 இரக்கச் செயல்கள், மற்றும் ஆன்மிகம் சார்ந்த 7 இரக்கச் செயல்கள் ஆகிய 14 செயல்கள், சிலுவைப் பாதையின் 14 நிலைகளின் மையக் கருத்துக்களாக, இளையோருக்கு வழங்கப்பட்டன. எடுத்துக்காட்டாக, இயேசு மரணத்திற்குத் தீர்ப்பிடப்பட்ட முதல் நிலை, வீடற்றோருக்கு புகலிடம் என்ற மையக் கருத்துடன் நடத்தப்பட்டது. ளுயஎந நுபனைழை பிறரன்பு அமைப்பு வழிநடத்திய முதல் நிலையில், பாகிஸ்தானைச் சேர்ந்த இளையோர் பலர் கலந்துகொண்டனர். சிலுவைப் பாதையின் இறுதியில், திருத்தந்தை பிரான்சிஸ் அவர்கள் உலகில் நிகழும் துன்பங்கள் நடுவே, 'கடவுள் எங்கே?' என்ற கேள்வி நமக்குள் எழுகிறது என்ற எண்ணத்துடன் தன் உரையை வழங்கினார்.

சிலுவைப்பாதை பக்தி முயற்சிக்குப் பின், இளையோர், கிரக்கோவ் நகரின் மையச் சதுக்கத்தில் கூடி வந்தனர். Piotr Rubik என்ற புகழ்பெற்ற இசைக் கலைஞரின் இசை நிகழ்ச்சியை, இச்சதுக்கத்தில் யுனை வழ வாந ஊரசஉா பை நேநன அமைப்பினர் ஏற்பாடு செய்திருந்தனர்.

உலகில் துன்புறும் கிறிஸ்தவர்கள் பற்றிய இந்த இசை நிகழ்ச்சியில், போலந்து நாட்டில் கம்யூனிச அரசால் கொலை செய்யப்பட்ட அருளாளர் Jerzy Popiełuszko என்ற அருள் பணியாளரின் கருத்துக்கள் பாடல் வடிவில் இடம்பெற்றன.

2010ம் ஆண்டுவரை உள்ள கணக்கெடுப்பின்படி, உலகில் இதுவரை 7 கோடிக்கும் மேற்பட்ட கிறிஸ்தவர்கள் மறை சாட்சிகளாக உயிரிழந்துள்ளனர். இவர்களில், 4 கோடியே, 50 இலட்சம் பேர் 20ம் நூற்றாண்டில் கொல்லப் பட்டுள்ளனர். மேலும், ஒவ்வோர் ஆண்டும் 1,50,000 முதல், 1,70,000 பேர் தங்கள் மத நம்பிக்கைக்காக கொல்லப்படுகின்றனர்.

இளையோர் சிலுவைப்பாதையின் இறுதியில் திருத்தந்தையின் உரை

"நான் பசியாய் இருந்தேன், நீங்கள் உணவு கொடுத்தீர்கள் தாகமாய் இருந்தேன், என் தாகத்தைத் தணித்தீர்கள் அன்னியனாக இருந்தேன், என்னை ஏற்றுக் கொண்டீர்கள் நான் ஆடையின்றி இருந்தேன், நீங்கள் எனக்கு ஆடை அணிவித்தீர்கள் நோயுற்றிருந்தேன், என்னைக் கவனித்துக் கொண்டீர்கள் சிறையில் இருந்தேன், என்னைத் தேடி வந்தீர்கள்" (மத். 25: 35-36)

நம் மனதில் அடிக்கடி எழும் "கடவுள் எங்கே?" என்ற கேள்விக்கு, இயேசு கூறும் இச்சொற்கள் விடை தருகின்றன. இவ்வுலகில் தீமை நிலவும்போது, இவ்வுலகில், உணவின்றி, தங்க இடமின்றி, மக்கள் இருக்கும்போது, புலம்பெயர்ந்தோரும், நாடுகளைவிட்டுத் துரத்தப்பட்டோரும் இருக்கும்போது, கடவுள் எங்கே? போர், மற்றும் வன்முறைகளால் குற்றமற்ற மக்கள் இறக்கும்போது, கடவுள் எங்கே? கொடுமையான நோய்கள், உறவுகளைப் பிரிக்கும்போது கடவுள் எங்கே? சந்தேகத்தாலும், துன்பங்களாலும் உள்ளம் சிதைந்துபோகும்போது, கடவுள் எங்கே?

இக்கேள்விகளுக்கு மனித அளவில் விடைகள் கிடைக்காது. இயேசுவிடம் நம் பார்வை திரும்பவேண்டும். அப்போது இயேசு கூறும் பதில், "கடவுள் அவர்களில் இருக்கிறார்". இயேசு அவர்களில் இருக்கிறார், அவர்கள் வழியே, அவர்களோடு அவரும் துன்புறுகிறார். இயேசு அவர்களுடன் 'ஒரே உடல்' போல தன்னையே இணைத்துக் கொண்டுள்ளார்.

கல்வாரிவரைச் செல்லும் துயரத்தின் வழியில் துன்புறும் மக்களுடன் தன்னையே ஒன்றுபடுத்தி, அவர்களோடு நடக்க சம்மதிக்கிறார். சிலுவையில் இறந்ததால், தன் மீது, மனித சமுதாயத்தின் அனைத்து காயங்களையும் அவர் ஏற்றுக்



கொண்டார். சிலுவையை விரும்பித் தழுவியதால், இயேசு, உலகில் உள்ள பசி, தாகம், தனிமை, துன்பம், மரணம் என்ற அனைத்தையும் அரவணைத்துக் கொண்டார். இன்று இரவு இயேசுவோடு இணைந்து, துன்புறுவோர் அனைவரையும், குறிப்பாக, சிரியாவின் போரினால் சிதறி ஓடும் சகோதர, சகோதரிகளை நாம் அரவணைப்போம்.

இயேசுவின் சிலுவைப் பாதையைத் தொடர்ந்ததால், பதினான்கு இரக்கச் செயல்களின் முக்கியத்துவத்தை நாம் உணர்ந்திருக்கிறோம். இரக்கம் இல்லையேல், நம்மால் ஒன்றும் செய்ய இயலாது. முதலில் நாம் உடல் சார்ந்த ஏழு இரக்கச் செயல்கள் பற்றி சிந்திப்போம். பசித்தோருக்கு உணவளித்தல், தாகமுற்றோருக்கு பானம் தருதல், ஆடையற்றவரை உடுத்துதல், வீடற்றோருக்கு தஞ்சம் அளித்தல், நோயுற்றோரையும், சிறையிலும் இருப்போரையும் சந்தித்தல், இறந்தோரை அடக்கம் செய்தல். வாழ்வின் கொடைகளை நாம் இலவசமாகப் பெற்றுக்கொண்டோம், இலவசமாக வழங்குவோம். சமுதாயத்தில் ஒதுக்கப்பட்டோருக்கு பணியாற்றுவது, சிலுவையில் அறையுண்ட கிறிஸ்துவுக்குப் பணியாற்றுவதற்கு ஒப்பாகும்.

அங்கு நாம் கடவுளைக் காண்கிறோம், கடவுளைத் தொடுகிறோம். இயேசுவே இதை நமக்குக் கூறியிருக்கிறார். சிறியோராகிய என் சகோதர, சகோதரிகளுக்கு நீங்கள் செய்வதெல்லாம், எனக்கே செய்கிறீர்கள் (மத். 25: 31-46)

உடல் சார்ந்த இரக்கச் செயல்களுக்கு அடுத்ததாக, ஆன்மீகம் சார்ந்த இரக்கச் செயல்களைச் சிந்திக்கிறோம். தடுமாறுவோருக்கு அறிவு புகட்டுதல், தெரியாதோருக்கு சொல்லித் தருதல், பாவிகளைத் திருத்துதல், துன்புறுவோரைத் தேற்றுதல், குற்றங்களை மன்னித்தல், வீண்பழிகளை பொறுமையுடன் ஏற்றுக்கொள்ளுதல், வாழ்வோர், மற்றும் இறந்தோருக்காக மன்றாடுதல்.

அரைகுறையாய் வாழ விருப்பமற்ற மக்கள், குறிப்பாக, உங்களைப் போன்ற இளையோர் இவ்வுலகிற்குத் தேவை. சமுதாயத்தில் மிகவும் வறுமைப்பட்டவர்கள், வலுவற்றவர்கள் ஆகியோருக்கு தன்னையே வழங்க முன்வரும் இளையோர் சமுதாயத்திற்குத் தேவை. பிறருக்குப் பணிபுரியாத வாழ்வு, கிறிஸ்தவ வாழ்வு அல்ல.

பிறருக்குப் பணியாற்றுவதில் முன்னிலை வகிக்கவேண்டும் என்று, இந்த மாலை நேரத்தில், மீண்டும் ஒருமுறை உங்களிடம் கேட்கிறார், இறைவன். நாம் வாழும் இன்றைய உலகில், அவரது இரக்கம் நிறைந்த அன்பின் அடையாளங்களாய் வாழ உங்களிடம் கேட்கிறார்.

தன்னையே முழுவதும் தியாகம் செய்ததன் வழியே, நாம் எவ்விதம் இப்பணியைச் செய்ய முடியும் என்பதைக் காட்டுகிறார், இயேசு. முழுமையான அர்ப்பண உணர்வோடு, இயேசுவைப் பின்பற்ற, சிலுவைப்பாதை ஒரு வழியாக அமைகிறது.

சிலுவைப் பாதை மட்டுமே பாவத்தையும் தீமையையும், சாவையும் வெல்கிறது. அதுவே

தொடர்ச்சி பக்கம் 17

16ம் பக்கம் தொடர்ச்சி

நம்பிக்கையின் வழி, எதிர்காலத்தின் வழி. இந்த வழியை ஏற்று, பின்பற்றுவோர், மனித சமுதாயத்திற்கு நம்பிக்கையையும், எதிர்காலத்தையும் தருகின்றனர்.

அன்பு இளைய நண்பர்களே, முதல் புனித வெள்ளியன்று, பல சீடர்கள், மனம் உடைந்து, தங்கள் இல்லங்களுக்குத் திரும்பினர். இன்னும் சிலர், சிலுவையை மறப்பதற்காக, நகரை விட்டே கிளம்பினர். நான் உங்களிடம் கேட்கிறேன்: இந்தச் சிலுவைப் பாதையின் இறுதியில், நீங்கள் எவ்விதம், உங்கள் இல்லங்களுக்கு, நீங்கள் தங்கியிருக்கும் இடங்களுக்குச் செல்ல விரும்புகிறீர்கள்? இந்தக் கேள்விக்கு நீங்கள் ஒவ்வொருவரும் தனித்தனியே பதில் சொல்ல வேண்டும்.

## திருத்தந்தை - இன்றும் மக்களின் துயரங்கள் தொடர்கின்றன



திருத்தந்தை பிரான்சிஸ் அவர்கள், வெள்ளி மாலையிலும் திட்டமிட்ட அனைத்துப் பணிகளையும் நிறைவு செய்தபின், மேல்மாடத்தில் மக்களைச் சந்திக்க வந்தார். உலகில் மலிந்துவரும் துன்பங்களைக் குறித்துப் பேசினார். கூடியிருந்த மக்களுக்கு போலந்து மொழியில் மாலை வணக்கம் (Dobry wieczór!) என்று வாழ்த்தி, தன் உரையைத்



துவக்கினார், திருத்தந்தை.

இன்று துன்பத்தின் நாள். வெள்ளிக்கிழமை, பொதுவாக, இயேசுவின் பாடுகளையும், மரணத்தையும் நினைவுகூரும் நாள். உலக இளையோரோடு இணைந்து சிலுவைப் பாதை பக்தி முயற்சியை இப்போதுதான் நிறைவேற்றினோம். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த துயரம் அல்ல இது, இன்றும் மக்களின் துயரங்கள் தொடர்கின்றன.

இன்று பிற்பகல் குழந்தைகள் மருத்துவமனைக்குச் சென்றேன். குழந்தைகள் ஏன் துன்புறவேண்டும்? என்ற கேள்வி அடிக்கடி எழுகிறது. இந்தக் கேள்விக்கு விடைகள் கிடையாது. இது ஒரு மறைப் பொருள்.

இன்று காலை, Auschwitz, Birkenau வதை முகாம்களுக்குச் சென்றேன். எவ்வளவு துயரம்!, எவ்வளவு கொடுமை! இறைவனின் சாயலில் படைக்கப்பட்ட மனிதர்கள் இவ்வாறெல்லாம் செய்ய முடியுமா?

சித்ரவதைகள், Auschwitz,Birkenau முகாம்களோடு நின்றுவிடவில்லை. இன்றும், கைதிகள் சொல்லமுடியாத சித்ரவதைகளை அனுபவித்து வருகின்றனர். இன்றும் மனிதர்கள் கொடுமையாகக் கொல்லப்படுகின்றனர். திருத்தந்தை நமது தாயத்தையும் ஏன் முள்ளிவாய்க்காலையும் கூட நினைத்திருக்கலாம் இந்தக் கொடுமைகளை இயேசு தன் தோள்களில் சுமக்க வந்தார். நம்மையும் தன்னோடு நடக்கச் சொல்கிறார், செபிக்கச் சொல்கிறார். நோயுற்றோர், பசித்திருப்போர், தனிமையில் இருப்போர், துயருறுவோர், குழந்தைகள் அனைவருக்காகவும் செபிக்கச் சொல்கிறார்.

பல்வேறு நாடுகளில், சிறைகளில் மிருகங்களிலும் கேவலமாக நடத்தப்படும் கைதிகளுக்காக சிறப்பாக செபிக்கிறோம். இவை அனைத்தையும், இயேசு, தன் மீது ஏற்றுக்கொள்கிறார். நமது பாவங்களையும் கூட. நாம் அனைவரும் பாவிகள். ஆயினும், அவர் நம்மீது அன்பு கொள்கிறார்.
செபத்தில் இணைந்துள்ள நாம் அனைவரும், கண்ணீரோடு, நம் தாயைத் தேடி வருகிறோம். அந்தத் தாயிடம், நாம் ஒவ்வொருவரும் நம் தாய் மொழியில் 'அருள் நிறை மரியே' என்ற செபத்தைச் சொல்லி வேண்டுவோம்.





"எமது குழந்தைகளின் கல்வி எமது முதியோருக்கான சேவை, போக்குவரத்தில் முக்கிய முதலீடுகள் இவை யாவும் எமது சமூக வளர்ச்சிக்கு அவசியமானவை. இந்த நாட்டுக்கு அகதியா வந்தவன் என்ற வகையில் எம்மில் பலர் நாளாந்தம் எதிர்கொள்ளும் பல சிக்கல்களை நன்கு அறிவேன். ஆகையால் மாகாண சபை உறுப்பினராக பலமான உங்கள் குரலாக இருப்பேன்."

- பிரகல் திரு



ஒன்ராறியோ மாகாண சபையில் ஸ்காபரோ றூச் றிவர்த் தொகுதிக்குப் பலமான குரலொன்று அவசியம். முதல்வர் கத்தலின் வின் அவர்களின் தலைமையிலான ஆளுங்கட்சியின் மாகாணசபை உறுப்பினராவதன் மூலம் பிரகல் எம் சமூகத்தை முன்னேற்றுவதற்கான சிறந்த இடத்தைப் பெறுவார். பொதுப் போக்குவரத்துத் துறையில் திட்டமிடல் அனுபவமும் நீண்ட நாட்கள் சமூகத்திற்கு ஆற்றிய சேவையும் அவரை ஸ்காபரோ றூச் றிவர்த் தொகுதியின் பல்லின மக்களின் தேவைகளை பூர்த்தி செய்யவல்ல மிகச் சிறந்த வேட்பாளராக்கியுள்ளது.

*- ஹறி ஆனந்தசங்கரி, பாராளுமன்ற உறுப்பினர், ஸ்காபரோ-றூச் பாக்*

தமிழ்க் கனடியர்களுக்கும் புதிய கனடியர்களுக்கும் ஏன் அனைத்துக் கனடியர்களுக்குமான பிரகல் திரு அவர்களின் சமூக சேவைக்கான அர்ப்பணிப்பை நான் ஆழமாக மதிக்கிறேன். ஒன்ராறியோப் பாராளுமன்றத்தில் தமிழர்களுக்கு ஓர் சிறந்த குரலாக ஒலிக்க பிரகல் திருவுக்கு வாக்களியுங்கள். இதன் மூலம் ஸ்காபரோவுக்குச் சிறந்த தலைமைத்துவத்தை நிரூபித்த, அயராது உழைக்கவல்ல ஒருவரை உறுப்பினராக ஆக்க முடியும்.

*வனிதா நாதன், கல்விச் சபை உறுப்பினர், மார்க்கம்*



# Piragal THIRU

**Your Liberal Candidate for Scarborough-Rouge River**




**தொடர்புகளுக்கு:**

Piragal Thiru
@piragal
electpiragalthiru.ca
info@electpiragalthiru.ca
416-274-1435
5651 Steeles Ave E. Unit 25
Toronto, ON M1V 5P6

## "அப்பம் பலுகிய" இயேசுவின் புதுமை பற்றி திருத்தந்தை பிரான்சிஸ

திருப்பயணிகளுக்கு, 'அப்பம் பலுகிய' இயேசுவின் புதுமை குறித்து எடுத்துரைத்தார் திருத்தந்தை பிரான்சிஸ். 'இரக்கம் என்பது ஒன்றிப்பின் கருவி' என்பதை மையக் கருத்தாகக் கொண்டு திருத்தந்தையின் இப்புதன் உரை இருந்தது.

அன்புச் சகோதர சகோதரிகளே, இரக்கத்தின் யூபிலி ஆண்டு, நம் மறைக்கல்வி உரைத் தொடரில் இன்று, 'இயேசு அப்பத்தையும் மீன்களையும் பலுகச் செய்த புதுமை' குறித்து நோக்குவோம். புனித மத்தேயு நற்செய்தி 14ம் பிரிவு திருச்சொற்றொடர்கள் 13 முதல் நோக்கினோமென்றால், இயேசு தனிமையாகச் சென்று செபம் செய்ய விரும்பினார் என்பதை அறிகிறோம். ஆனால், ஆதரவின்றி நின்ற மக்கள் கூட்டத்தைக் கண்டு, இரக்கம் கொண்டவராக, அவர் அவர்களோடு இருக்க விரும்பியதையும் காண்கிறோம். அந்த மக்கள் கூட்டத்திற்கு உணவை வழங்கும்படிக் கூறும் இயேசு, அதன் வழியாக, அவர்களுக்கு விசுவாசத்தையும், தேவையில் இருப்போர் மீதான தன் அக்கறையில் பங்கெடுப்பதையும் கற்பிக்கிறார். அப்பத்தையும் மீன்களையும் பலுகச்செய்த இந்தப் புதுமையானது, இரக்கம் நிறைந்த அக்கறையின் உறுதியான அடையாளமாகும்.

இயேசு அந்த அப்பத்துண்டுகளை கையில் எடுத்து, வானத்தை அண்ணாந்து பார்த்து, அவைகளை ஆசீர்வதித்து பிட்டுக் கொடுத்த அந்த நிகழ்வு, அவர் இறுதி இரவு உணவின்போது திருநற்கருணையை உருவாக்கியதை நம் கண்முன் தெளிவாகக் கொணர்கிறது. திருநற்கருணைப்பலியில் பங்குகொள்வதன் வழியாக, நாம், ஆன்மீக ஊட்டத்தை மட்டும் பெறவில்லை, இயேசுவில், மேலும் சிறப்பான விதத்தில் உறுதிச் செய்யப்படுகிறோம். அதுமட்டுமல்ல, நம்மைச் சுற்றியிருப்போரிடையே நாம், இயேசுவின் இரக்கம் நிறை இருப்பின் அடையாளங்களாக மாறுகின்றோம். கிறிஸ்துவின் உடலின் அங்கத்தினர்களாகிய நாமனைவரும், நம் குடும்பங்களுக்கும், சமுதாயத்திற்கும், குறிப்பாக தேவையில் இருக்கும் அனைவருக்கும், இறைவனின் நெருக்கம், இரக்கம் மற்றும் அன்பெனும் ஊட்டச்சத்தைக் கொணர்வோமாக.

இவ்வாறு, தன் புதன் மறைக்கல்வி உரையை வழங்கிய திருத்தந்தை பிரான்சிஸ் அவர்கள், அனைவருக்கும் தன் அப்போஸ்தலிக்க ஆசீரையும் வழங்கினார்.

## பானமா நாட்டில், 2019ம் ஆண்டு, இளையோர் நாள் சிறப்பிக்கப்படும்




உலக இளையோர் நாள் நிகழ்வுகள் இறுதித் திருப்பலியில் இறுதியில் திருத்தந்தை பிரான்சிஸ் அவர்கள் வழங்கிய நண்பகல் மூவேளை செப உரை:

உலக இளையோர் நாள் நிகழ்வுகளை, திறம்பட ஏற்பாடு செய்திருந்த கர்தினால் ஞுவயளைர்யற னுணறைளைண அவர்களுக்கும், உடன் உழைத்த அனைவருக்கும் நெஞ்சார நன்றி கூறுகிறேன். இந்நாட்களில், கிரக்கோவ் நகரில் நிலவிய உற்சாகத்தை, புனித 2ம் ஜான்பால், விண்ணகத்திலிருந்து கண்டு மகிழ்ந்திருப்பார்.

உலகினர் அனைவரும் உடன்பிறப்புக்களே என்ற உணர்வை இந்நாட்களில் நாம் இங்கு உணர்ந்தோம். செபத்தின் வல்லமையை நாம் உணர்வதற்கு இறைவன் துணை செய்தார். இந்நாட்களில் நீங்கள் பெற்றுக்கொண்ட கொடைகளை இழந்துவிட வேண்டாம் என்று, அன்னை மரியா உங்களுக்கு நினைவுறுத்துகிறார்.

1985ம் ஆண்டு, புனிதத் திருத்தந்தை 2ம் ஜான்பால் அவர்கள் உருவாக்கிய இந்த அற்புத முயற்சி, அடுத்த இரு ஆண்டுகள், மறை மாவட்ட அளவில் உலகெங்கும் தொடர்ந்து நடைபெறும். 2019ம் ஆண்டு, உலக இளையோர் நாள் நிகழ்வுகள், பானமா நாட்டில் நடைபெறும் என்பதை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

மரியன்னையின் பரிந்துரையோடு, தூய ஆவியாரின் வழி நடத்துதலுக்காக நாம் மன்றாடுவோம். நம் அனைவரையும் அவர் இறைவனின் இரக்கத்தைப் பறைசாற்றும் தூதர்களாக மாற்றுவாராக!

### வாழ்வுப் பயணத்தில் எப்போதும் நம்முடன் வரும் அன்னை மரியா

இறைவனின் மகிமையில் வாழும் அதேவேளை, நம் வாழ்வுப் பயணத்தில் எப்போதும் நம்முடன் கூட வரும் அன்னை மரியாவின் தாய்க்குரிய பாதுகாப்பில் உங்களனைவரையும் ஒப்படைக்கிறேன்" என தன் டுவிட்டர் பக்கத்தில் இத்திங்களன்று செய்தி வெளியிட்டுள்ளார், திருத்தந்தை பிரான்சிஸ்.



Pope Francis
@Pontifex

# கற்பனை என்றாலும் கற்சிலை என்றாலும்

செல்வம் அருளானந்னம்

நான் பிறந்த கிராமமான சில்லாலையை 'சின்னறோம்' என்றும் அழைப்பதுண்டு. கத்தோலிக்க கிறிஸ்தவர்கள் பெரும்பாண்மையினர் வாழ்ந்ததாலோ அல்லாவிடில் அந்தக்காலத்தில் கோவாவில் இருந்து வேதம்பரப்ப வந்த யோசவாஸ் என்ற வேதமுனிவரை, ஒல்லாந்தரிடமிருந்துது காப்பாற்றி அடைக்கலம் கொடுத்தாலோ, அல்லாவிடில் பெரியதொரு மாதர கோவில் இருப்பதாலோ அப்பெயர் வந்திருக்கலாம்.. 'ஓ நீங்கள் சிலாலையோ! அப்ப சின்னறோம்காறார்' என்று சிலர் வேறு சில காரணங்களுக்காக நக்கலும் அடிப்பதுண்டு. அதை விடுவோம். நான் மிகச் சிறிய வயதில் இருந்த காலத்தில் ஒரு ஞாயிறு பின்னேரம் ஆசிர்வாத ஆராதனை முடிய, கோவில் முற்றத்தில் பெரிய விழா ஒன்று நடைபெற்றது. எங்கள் ஊரைச் சேர்ந்த ஒரு இளவயது குருவானவர் யாழ்ப்பாண மேற்றிராசனத்தினால் றோமுக்குச் சென்று கல்விகற்கத் தெரிவு செய்யப்பட்டிருந்தார். அவரைப் பாராட்டவே அந்தக் விழா.



வயதான கிறிஸ்துவ விசுவாசிகள் எல்லாம் பெரும் மகிழ்வில் இருந்தார்கள், அந்த இளம் குருவானவர் கடவுளைப் பார்க்கபோகிறார் என்று. றோமில் இருக்கும் போப்பாண்டவரை அவர்கள் கடவுளின் பிரதிநிதிதான் என்றே நம்பிக்கை கொண்டவர்கள், விழா முடிய, வீட்டுக்கு போற வழியில் வெலிச்சோர் அப்பு 'ரோமில் இருந்து ஒரு கொஞ்ச தூரம்தான் மோட்சம்' என ஆரோக்கியநாதருக்குச் சொல்லிக் கொண்டு வந்தது இப்பதான் காதில் கேட்டமாதிரியிருக்கு. ஆரோக்கியநாதர் அதை மறுத்து 'மோட்சம் வானத்திலையல்லோ' எனக் கேட்க, வெலிச்சோர் அப்பு, 'சுவாமி ஏரோப் பிளேனில் அல்லோ போறார், அப்பப வானத்திற்க்கு கிட்டத்தானே' எனக் கூற, ஆரோக்கியநாதர் 'எட்டி நடவண்ணை துரை தவறணையை பூட்டபோறான்' என கதைச்சு கதைச்சு அவை கள்ளுக் கொட்டில் பக்கமாய் போக, எப்படியும் நானும் சுவாமிக்குப் படிச்சு றோமுக்கு போகத்தான் வேணும் என்று நினைவுடன் கிட்டி புள்ளு விளையாடப் ஓடிப் போனேன்.

இலங்கையில் இனமுரண்பாடு காரணமாக பாரிசில் அடைக்கலம் தேடிய காலத்தில் றோமுக்கு போகவேண்டும் என்ற எண்ணம் ஒருக்காலும் ஏற்படவில்லை. லூட்ஸ் மாதா கோவிலுக்கு போனதற்கே 'எவ்வளவு கிளாஸ் வந்தாலும் எத்தனயோ புத்தகங்கள் வாசிச்சாலும் நீ திருந்தப் போவதில்லையென' மனோ திட்டினான். அதுமாத்திரமல்ல, சொந்தமாக ஒரு பாஸ்போட் இல்லை. இதுவும் ஒரு காரணம். ஏதாவது தேவையென்றால் ஆற்றையேன் பாஸ்போட்டைதான் பாவிச்ச காலம். இதை இப்ப சொன்னால் பிள்ளைகள்கூட மதிக்காது

சில மாதங்களுக்கு முதல் 'தாய்வீடு' பத்திரிகை அழைப்பின் பேரில் கனடா வந்திருந்த புகழ்பெற்ற ஓவியர் மருதுவை பலதடவை சந்திக்கவும் உரையாடவும் வாய்ப்பு கிட்டியது.

உடல் மொழியாலும் களங்கமில்லா சிரிப்பாலும் அவரே ஒரு ஓவியம் போல் எனக்கு தெரிந்தார். சிரிச்சு சிரிச்சு அவர் ஓவியங்கள்பற்றியும் சிற்பங்கள்பற்றியும் சொல்லிய விடயங்கள், இதுபற்றி எந்த முன் அறிவு ,இல்லாவிட்டாலும் ஓவியங்களையும் சிற்பங்களையும் தொடர்ந்து பார்க்கவேண்டும் அதுபற்றி அறியவேண்டும் என்ற ஆவல் ஏற்பட்டது. இம்முறை பாரிசுக்கு போகத்திட்டமிடும்போது ரோமுக்கும் செல்ல வேண்டும் என்ற ஆசை நிழலாயிருந்தது.

அதற்கிடையில், சுவிஸ்லாந்தில் இருக்கும் எழுத்தாளர் சயந்தன் 'பாரிசுக்கு வாறிங்களாம், சூரிச் நகரத்திற்கு வந்து தன்னை பர்க்கமுடியுமா?. சூரிச், பாரிசில் இருந்து நாலு மணித்தியாலம்தான்' என்றார் அவர் எழுதிய 'ஆதிரை' நாவல் வாசிச்ச மயக்கத்தில் இருந்துதான் அவரைப் பார்கிற விருப்பத்திலும் ,இருந்தேன். 'எனக்கு உங்களைப் பார்க்க விருப்பம் தான். ஆனால், எனக்கு நேரம் இருந்தால் றோமுக்கு போற எண்ணம்தான் இருக்கு உங்களிடம் வர நேரம் இருக்காது' என்று சொல்லியபோது 'அண்ணை எங்கடை வீட்டுக்கு பின்னாலைதான்' என்று சொல்லிய போது, 'என்ன உம்முடை வீட்டுக்கு பின்னாலையோ றோம்' என 'இல்லை எங்கடை வீட்டுக்கு பின்னாலைதான் றோமுக்கு போற றெயின் போறது. முதல் நீங்கள் என்னெட்டை வாங்கோ பிறகு நான் றோமுக்கு போற றெயினிலை ஏத்திவிடுகிறேன்' என்றார். ஒரு மாலை சூரிச்சுக்கு அவர் வீடு சென்றேன். நாளை மாலை றோமுக்கு போறேன் என்று சொன்னபோது 'அது கனதூராம் அண்ணை பத்து பதிநாலு மணித்தியாலம் செல்லும் அங்கை, இங்கை போறதைவிட்டு விட்டு ஏன்னோடை இரண்டு முன்று நாள் சுவிசில் நின்றுவிட்டு அப்படியே லண்டனுக்கு போய்சேருங்கோ' என்றார். எனக்கு கோபம் வந்தது. பக்கத்திலைதான் ரோம் என்று சொன்னபடியாலதான் வந்தானான் என 'அண்ணை நான் சொன்னது றோமுக்கு போற தண்டவாளம்தான் பக்கத்திலை இருக்கென்று' சொல்லி, கதையை மாத்தினான், தொடர்ந்து ,இலக்கியம் பேசிக்கொண்டிருக்க முடியாது எனச் சொல்லி அடுத்தநாள் மாலை றோமுக்கு றெயில் ஏறிறேன்.



போனவுடன் முதன் பார்த்தது வத்திக்கான் (மீயுசியம்) நூதனசாலை. அதைப்பற்றி எழுதுவது என்றால் ஓவியங்கள் பற்றி பேரறிவு வேண்டும் ஒன்றுமே தெரியாத நான் அதை, அந்தப் பேரழகை பற்றி எழுதுவது அழகல்ல. இளம் குளிரான சூரியன் சரிந்துகொண்டிருந்த ஒரு மாலையில்தான் பேதுருவின் பெருங்கோவிலைப் பார்த்தேன், யாழ்ளு கத்தோலிக்க மறை மாவட்டத்தில், சில்லாலை கோவில் பெரிதும் அழகு என்பார்கள். .ஒரு இருபது வயதில் அதைவிட பெரிய யாழ்பாண ஆசனக்கோலிலைப் பார்த்தேன். பாரிஸ் 'நொத்திரடாம்' கோவிலைப் பார்த்தபோது, .இதைவிட பெரிய கோவில் உலகில் ,இல்லையென நினைத்தேன். ஆனால், இந்தப் பேதிறு பெருங்கொவிலை பார்த்த போது திடுக்கிட்டுபோனேன், கோவிலா? அரண்மனையா?

கிறிஸ்து பிறப்பதற்க்கு 800 ஆண்டுகளுக்கு முதல், சின்னசிறு கிராமாக இருந்த இந்த இடம், பின்னாளில் உலகின் பெரும் பகுதியை ஆட்சிசெய்த, றோமப் பேரசின் தலைநகராகத் திகழ்ந்தது. கிறிஸ்து, இறந்து 300 ஆண்டுகளுக்கு பின், முதல் கிறிஸ்த்துவ அரசரான கான்ஸ்டாண்டின் என்பவரால் கட்டப்பட்டு, 15ம் நூற்றாண்டில் புதுப்பிக்கப்பட்ட பிரமாண்டமான தேவாலாயம். உலகின் தலைசிறந்த கலைஞர்கள், இத்திருப்பணியில் பங்கு பெற்றுள்ளனர், தேவாலயத்தின் மாடம் உலகமே போற்றும் மைக்கல் ஆஞ்சலோவினால் வடிவமைக்கப்பட்டது, உலகின் மிகப்பெரும் தேவாயம் இதுவே. நாற்பதுக்கு மேற்பட்ட பிராத்தனை மேடைகள், உள்ளே வண்ணக் கண்ணாடிகளும் பெரும் சிலைகளும்ஹி.'யோவாவின் மகனான சீமோனே, இராயப்பா நீ கல்லாய் இருக்கிறாய் ,இக்கல்வின் மீது எனது சபையை கட்டுவேன்', என்று வாழ்த்தப்பெற்றவன். சேவல் இரண்டு தடவை கூவ முன் மூன்று முறை யேசுவை மறுதலித்தவன். யேசுவின் அன்புக்குரிய தலைமைச் சீடனாய் இருந்த பேதுறவின் பெயரால் கட்டப்பட்ட கோவில் இது. இந்த இடத்தில்தால் அவன் கிறிஸ்துவுக்கு சாட்சியாய் தலைகீழாய் சிலுவையில் அறையப்பட்டு, கொல்லப்பட்டு அடக்கம் செய்யப்பட்டான் என்பது ஜதீகம்.

போர்துக்கீச அரசாலும் ஸ்பானிஸ் அரசாலும் உலகமெல்லாம் கடலோடிச் சென்று திரவியங்களைக் கொண்டுவந்து அப்போதைய கத்தோலிக்க தலைமைக்குமுன் குவிக்கப்பட்ட சொத்துக்களால் கட்டப்பட்ட கட்டிடக் காடு. மாடு உறையும் குடிலில் பிறந்தவன், 'பறவைகளுக்கு கூடுகள் இருக்கு, நரிகளுக்கு வளைகள் இருக்கு, மனுமகனுக்கோ தலைசாய்க இடமில்லை' என்றவன், செல்வந்தருக்கு மோட்சம் இல்லையென்றவன், 'மேலாடையை கேட்பவனுக்கு உள்ளாடையும் மறுக்காதை' என்றவன் பெயராலா இத்தனை ஆற்பாட்டம் என என் மனதில் எண்ணிக்கொண்டேன். அந்த பெருங்கோவிலில் உள்ளிட்டவுடன் தெரிவது மைக்கல் ஆஞ்சலோவின் 'தாயும் சேயும்' என்ற சிற்பம். .உண்மையில் நான் றோமுக்கு போனது இதைப் பார்கத்தான். என் நண்பர் ஓவியர் கருணா, இச்சிலையை பற்றி பல தடவை சொல்லியிருக்கிறார். ஒவ்வொரு முறை சொல்லும் போதும் அவர் முகம் வேறொரு தோற்றம் கொள்ளும். இலக்கியம், ஓவியம், சிற்பங்கள் பற்றி கதைக்கிறது என்றால் ஒரு முறையாவது ஆஞ்சலோவின் தாயும் சேயும் நீங்கள் பார்க்க வேண்டும் என்று வற்புறுத்துவார். அவர் வழிநடத்தலின்படி பல கோடி மக்கள் பார்த்த, பார்கின்ற அந்த பேரழகின் முன் நிற்கின்றேன்.

தொடர்ச்சி பக்கம் 21

20 ஆம் பக்கத் தொடர்ச்சி



"மீட்பின் வேட்கையோ
அறையப்பட்ட சிலுவையிலிருந்து
விலங்குகளோடுள்ள
வியாகுலமாதா மடியில்"

ஏன்ற கவிதை ஞாபகத்திற்கு வந்தது. நீண்ட நேரம் அச்சிலையின் முன் நின்றேன். றோமாபுரியின் மாலைச் சூரியன் மெல்ல மெல்ல மறைந்து கொண்டு இருந்தது. பெரிய காவியத்தை பார்த்த திருப்தியோடு என்னை றோமுக்கு போகப்பண்ணிய அக்கலைஞனுத்து நன்றி சொல்லியவண்ணம் ஒரு காலத்தில் பேரரசாகவும் இன்று பேருக்கு அரசாகவும் இருக்கும் வத்திக்கானைவிட்டு புறப்பட்டேன்.



தாயும் சேயும் சிலை பிரமிட் அமைப்பாய் அமைந்திருக்கு. மரியாவின் தலை பிரமிட்டின் உச்சிபோல் உள்ளது. மரியா அணிந்திருக்கும் உடை கீழே விரிந்து கெல்கத்தா மலைப்பாறை என்று அகன்று முடிகிறது. மரியாவின் வலதுகை இயேசுவின் தோளுக்கு கீழே அவரைத் தாங்கி பிடித்திருக்கிறது. முதலில் நான் நின்ற கோணத்தில் எனக்கு யேசுவின் முகம் சரியாய் தெரியவில்லை. மரியாளின் முகமே தெரிந்தது. ஒரு சொற்ப காலம் கடவுள் மறுபில் இருந்தவன் நான். அப்போதுகூட மரியாளின் அக்கனிவு கொண்ட முகம் மறந்து போகவில்லை. நானும் தாய் வழிச் சமூகத்தில் வந்த ஒரு தமிழன்தானே. காஞ்சியிலே காமாட்சி, மதுரையிலே மீனாட்சி எனவும், கண்ணகியே எங்கள் முதும் பெரும் கொற்றவள் என்ற நம்பி வழிபட்டவர்களல்லோ !

மாகாளி அன்னை பராசக்தி என்று சொன்னவன் எங்கள் முன்னோடியல்லோ! அச்சிலையின்முன் நிற்கும்போது என்னுடைய அம்மாவின் நினைவு வந்தது. 'விடியில் காலத்தின் நட்சத்திரமே! வியாதிக்காறருக்கு ஆரோக்கியமே ! எங்கள் சந்தோசத்தின் காரணமே'! என அவ அடிக்கடி சொல்லும் மாதாவின் பிராத்தினை எங்கோ தூரத்தில் கேட்டமாதிரி. மரியாள் பெரும்பாலும் நட்சத்திரங்களுடன்தான் ஒப்பிடப்பட்டிருக்கிறாள்.

'அழகிய நட்சத்திரங்களையெல்லாம்விட அழகிய நட்சத்திரமே' என்று ஒரு ஆங்கில கவிஞன் எழுதியிருக்கிறான். ஆஞ்சலோ மரியாவை ஒரு எழில்மிகு இளம் பெண்ணா செதுக்கியுள்ளான். 'எப்பொழுதும் நீ கன்னியல்லோ என்று நம்பும் மார்கத்தில் வந்தவன்! தாந்தே என்ற பெயர்பெற்ற இத்தாலியக் கவிஞனைப் படித்தவன் அல்லோ! 'கன்னித்தாயே உம்மகனின் மகள் நீரே' என்று அவன் எழுதியிருப்பான். யேசு கடவுள் என்றால் அவள் அவரின் மகள் அல்லோ! அதே நேரத்தில் அவரை இவ்வுலகிற்கு ஈன்றளித்தவள், மகளாகவும் தாயாகவும் இச்சிலையை வடித்த பெரும் கவிஞன் அவன். தன் மடியில் இடக்கும் இயேசுவை தம் குழந்தையாக காண்கிறார். பால் மணம் மாறாத குழந்தையை, தாய் அன்போடு மடியில் தாலாட்டுவது போல் மரியா தன் மகனை மடியில் கிடத்தி பாசத்தோடு அவரை நோக்குகின்றார் .அனைவராலும் கைவிடப்பட்டு, உயிர் துறந்த நிலையில் குறுகிப் போய் மடியில் கிடக்கின்ற இயேசு, மனித வலுவின்மை அடையாளமாக உள்ளார். கடவுள் என்றாலும் மனிதானய் பிறந்தால் இதுதான் நிலை. அந்தப் பெரிய இராமபிரானே துன்பம் தாங்காமல் 'கையறு நிலை உன்னால் கடப்பது கருதி வந்தோம்' என குரங்குகளின் அரசன் சுக்கிரிவனிடம் அழுதபோதும் 'இறைவா இறைவா ஏன் என்னை கைவிட்டாய்' என யேசு குளறியதும் மனித நிலையல்லோ ( இவைக்கெல்லாம் எத்தனைதரம் சொல்லுறது, .ஏதாவது எங்களுக்கு உதவி செய்யிறது என்றால் உங்கடை இடங்களிலேயே இருந்தபடி செய்யுங்கோ இஞ்சை வராதையுங்கோ என்று )

மரியாளை அழகிய இளம் பெண்ணாகவும் யேசுவின் முகத்தில் அவர் அனுபவித்த



துன்பங்களின் அறிகுறி எதுவும் இல்லாமல் தாயும் சேயும் சிலை படைக்கப்பட்டிருக்கு. அது சாவை பிரதி பலிக்கவில்லை. அன்பையும் அமைதியையும் அவ்வோவியன் சொல்ல வருகின்றான். தாயும் மகனும் அமைதியின் வடிவாமாக தோன்றுகின்றார்கள். ஆனால், எனக்கு ஏதோ துக்கம் சூழ்ந்து வந்தது. 'முள்ளிவாய்கால்' அவலத்தின்போது மிக மன வருத்தத்துடன் என் நண்பன் மு.புஸ்பராஜன் எழுதியன

# மன்னிப்பு விண்ணகத்திற்கு அழைத்துச் செல்லும் உறுதியான வழி

பழங்காலத்திலிருந்து வழங்கி வந்துள்ள ஒரு மரபின்படி, புனித பிரான்சிஸ், இதே இடத்தில் நின்று, கூடியிருந்த மக்களிடமும், ஆயர்களிடமும், "உங்கள் அனைவரையும் நான் விண்ணகத்திற்கு அனுப்ப விழைகிறேன்" என்று கூறியதை இன்று நினைவுகூருகிறேன் என்று, திருத்தந்தை பிரான்சிஸ் அவர்கள், தன் அசிசி நகர் பயணத்தில் கூறினார்.



அசிசி நகரில் உள்ள விண்ணகத் தூதர்களின் புனித மரியா பசிலிக்காவின் நடுவே, அசிசி நகர் புனித பிரான்சிஸ் உருவாக்கியதாகச் சொல்லப்படும் "ழசணரைஉரடய சிற்றாலயத்திற்கு சென்று செபித்தபின், கூடியிருந்த மக்களிடம் திருத்தந்தை ஆற்றிய தியான உரையில் இவ்வாறு கூறினார்.

விண்ணகம் என்பது, இறைவனின் அன்பை எப்போதும் தியானித்தபடியே வாழும் உன்னத வாழ்க்கை என்பதை உணர்ந்தவர், புனித பிரான்சிஸ் என்று கூறிய திருத்தந்தை, விண்ணகத்திற்கு அனைத்து மக்களை அனுப்புவதை தன் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டிருந்தவர், புனித பிரான்சிஸ் என்பதையும் எடுத்துரைத்தார்.



மன்னிப்பு வழங்குவதும், பெறுவதும் விண்ணகத்திற்கு நம்மை அழைத்துச் செல்லும் உறுதியான வழி என்பதை நாம் அறிந்தாலும், மன்னிப்பை வாழ்வில் செயல்படுத்துவது மிகக் கடினமான சவாலாக உள்ளது என்று, திருத்தந்தை தன் உரையில் விளக்கினார்.

இயேசு இன்று நமக்கு வழங்கிய நற்செய்தியில் (மத்தேயு 18:21-35), மன்னிப்பின் அவசியத்தைக் கூறியுள்ளார் என்பதைச் சுட்டிக்காட்டியத் திருத்தந்தை, நாம் ஒவ்வொருவரும் மன்னிக்கப்பட்டுள்ளோம் என்பதே, நாம் மற்றவர்களை மன்னிப்பதற்கு ஒரு முக்கிய காரணமாக அமைந்துள்ளது என்று கூறினார்.

நாம் அனைவருமே இறைவனுக்கு அதிகம் கடன்பட்டவர்கள் என்பதை அறிவோம், இருப்பினும் இறைவன் நம்மை மன்னித்ததால், நம்மிடம் கடன்பட்டோரையும் மன்னிக்க அழைக்கிறார் என்று திருத்தந்தை எடுத்துரைத்தார். தன் உடன் ஊழியரின் கடனை மன்னித்துவிட மனமின்றி, அவரது கழுத்தை நெரித்தப் பணியாளரைப் போலவே, நம் வாழ்விலும் பல அனுபவங்கள் இடம்பெறுகின்றன என்று சுட்டிக்காட்டியத் திருத்தந்தை பிரான்சிஸ் அவர்கள், "ஏழு முறை மட்டுமல்ல, எழுபது தடவை ஏழுமுறை" (மத். 18:22) என்பதே, கிறிஸ்தவ மன்னிப்பின் அளவுகோல் என்று வலியுறுத்தினார்.

வெறுப்பில் ஆழ்ந்திருக்கும் இவ்வுலகிற்குத் தேவையான ஒரு மருந்து, மன்னிப்பு என்றும், அந்த மன்னிப்பை பெறுவதற்கு, இரக்கத்தின் யூபிலி சிறந்த தருணம் என்றும், திருத்தந்தை, தன் தியான உரையின் இறுதியில் எடுத்துரைத்தார்.

# ஜேர்மனி தேசத்தில் புலம்பெயர் தமிழ் மக்கள் ஒன்றிணைந்த கேவலார் மகத்தான திருப்பயணம்




புலம்பெயர் தமிழ் மக்கள் ஒன்றிணைந்து ஜேர்மனி தேசத்தில் கேவலார் திருப்பதியில், இலங்கை மருதமடு அன்னையின் திருநாளில் நம் நாட்டின் நிரந்தர அமைதிக்காக வேண்டுதல் செய்யும் பெருவிழா இவ்வாண்டும் ஜேர்மனி தமிழ் கத்தோலிக்க ஆன்மீக பணியகத்தால் ஒழுங்கு செய்யப்பட்டு ஆவணி மாதம் 13ஆம் திகதி சனிக்கிழமை சிறப்பாக நடைபெற்றது.

பல ஐரோப்பிய நாடுகளில் இருந்து பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட தமிழ் மக்கள் கேவலார் திருயாத்திரையில் பங்கேற்றனர்.

இந்த திருவிழாவை முன்னிட்டு திருமலை மறைமாவட்ட ஆயர் அதிவண.நோயல் இம்மானுவேல் தாயகத்தில் இருந்து வருகை தந்திருந்தார்.
கேவலார் திருவிழாவிற்க்கான ஆயத்த வழிபாடுகள் 12ஆம் திகதி வெள்ளிக்கிழமை மாலை 6 மணிக்கு செபமாலை பவனியோடு ஆரம்பமாகின. செபமாலை பவனிக்கு பின்னர் அதே நாளில் 7மணிக்கு நற்கருணை ஆராதணையும் நடைபெற்றது.

திருவிழா திருப்பலி 13ஆம் திகதி அன்று காலை 10.45 மணிக்கு, திருமலை மறைமாவட்ட ஆயர் அதிவண.நோயல் இம்மானுவேல் தலைமையில் ஒப்புக் கொடுக்கப்பட்டது.

புலம் பெயர் தமிழ் மக்களின் ஆறுதலுக்கான ஒரு பதியாகவும் உறவுகளை வளர்க்க உதவுகின்ற ஒரு மையமாகவும் கேவலார் பதி விளங்குகின்றது.
அன்னை மரியாள் தனது வாழ்வில் என்றுமே இறைவனை சார்ந்து வாழ்ந்ததைப்போல நாமும் வாழ்ந்து இறைவனின் ஆசீர்வாதத்தை பெறவேண்டும்.திருவிழா திருப்பலியின் பின்னர் மதியம் 2 மணிக்கு மேலும் ஒரு திருப்பலியும் மாலை 5.30 மணிக்கு நற்கருணை ஆசீர்வாதமும் அதனை தொடர்ந்து அன்னை மரியாளின் திருச் சுருப பவனியும் நடைபெற்றது.

இலங்கை திருநாட்டினை ஒல்லாந்து (நெதர்லாந்து) நாட்டினர் ஆட்சி செய்த பதினேழாவது நூற்றாண்டில் கத்தோலிக்க விசுவாசத்தினை பாதுகாக்க, மக்கள் மன்னார் மாவட்டத்தின் மடு என்னும் வனப்பிரதேசத்தில் தஞ்சம் புகுந்தனர்.

அம்மக்களை அன்னை மரியாள் தனது பரிந்துரையினால் பாதுகாத்தார். இதனால் அம்மக்கள் ஆண்டுதோறும் அன்னைக்கு விழா எடுத்து வருகின்றனர். இம் மடுத்திருப்பதியானது இன்றும் இலங்கையில் வாழும் பல்லின மக்களை இணைக்கும் பாலமாக விளங்குகிறது.

இம் மடு அன்னையின் திருவிழாவினை ஐரோப்பிய மண்ணில் நினைவுகூருவதற்காக, ஜேர்மன் தமிழ்க் கத்தோலிக்க ஆன்மீகப்பணியகத்தினால் 1987ஆம் ஆண்டில் இருந்து இவ்விழா கேவலார் திருப்பதியில் ஆண்டுதோறும் கொண்டாடப்படுகிறது.

இந்த ஆண்டு தமிழ் மக்களின் கேவிலார் நோக்கிய திருயாத்திரை 29து ஆண்டாகவும் சிறப்புடன் நடைபெற்றமை குறிப்பிடத்தக்கது. அடுத்த கேவலார் திருவிழா 12.08.2017 அன்று நடைபெற உள்ளது எனவும் ஆயர் தனது மறையுரையில் தெரிவித்தார்.

# Introducing …
# Holy Cross Catholic Funeral Home

Located on the grounds of Holy Cross Catholic Cemetery, families can arrange all of their funeral, burial and cremation needs in one convenient location. We are dedicated to providing Catholic Families with compassionate care consistent with the values of our faith.



CATHOLIC CEMETERIES & FUNERAL SERVICES
ARCHDIOCESE OF TORONTO

**Holy Cross Catholic Funeral Home**

211 Langstaff Road East,
Thornhill, ON

**905-889-7467**
catholic-cemeteries.com